ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது.


சிலம்பு ௰ } மெய்கண்டான் யாண்டு-எாகூ ஆவணித் திங்கள் 1932 ௵ ஆகஸ்டு௴—செப்டம்பர்௴ { பரல் ௮


திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

முற்றுணை யாயினானை மூவர்க்கு முதல்வன்றன்னைச்
சொற்றுணை யாயினானைச் சோதியை யாதரித்தே
உற்றுணர்ந் துருகியூறி யுள்கசி வுடையவர்க்கு
நற்றுணை யாவர்போலு நனிபள்ளி யடிகளாரே.

பதவுரை :—

முன் துணை ஆயினானை—உடல் உட்கருவி (தனுகரணங்) களுடன் கூடிய சகல நிலைக்கு வருதற்கு முன்னுள்ள கேவலநிலையில் உயிர்களுக்குத் துணையா யிருக்கிறவனும்,

மூவர்க்கும் முதல்வன் தன்னை—சகல நிலையில் அயன் மால் உருத்திரன் மூவர்களையும் அதிட்டித்து நின்று உயிர்களுக்குப் படைத்தல் காத்தல் அழித்தல் ஆகிய முத்தொழில்களைச் செய்து துணையா யிருக்கிறவனும்,

சொல் துணை ஆயினானை—திருவைந்தெழுத்தை ஓதுகிறவர்களுக்குத் துணையாயிருந்து அருள் செய்கிறவனும்,

சோதியை—அவ்வாறு திருவைந்தெழுத்தை ஓதியதன் பயனாக ஓதுகிற வர்களுடைய உள்ளத்திலே ஒளியாய் விளங்கித் துணைசெய்கிறவனும்,

நனிபள்ளி யடிகளாரே—ஆகிய திருநனிபள்ளியில் எழுந்தருளி யிருக்கும் சிவபெருமானே,

ஆதரித்து—தன்னிடம் அன்பு வைத்து,

உற்று (நோக்கி)—அவ் வொளியினால் தாம் (36) முப்பத்தாறு தத்துவங்களி னின்றும் அகன்று தன்முனைப்புத் தோன்றாமல் தம்மை உள்ளபடி தெளிவுறக் கண்டு,

உணர்ந்து—'அவ்வாறு காணுதலினால் தம் உள்ளத்துள்ளே அத்துவிதமாய்க் கலந்துநின்று தமக்குக் காட்டியுங் தம்முடன் கண்டும் உபகரித்து வரும் அவனை' மெய்யுணர்வினால் உணர்ந்து,

உருகி ஊறி உள் கசிவு உடையவர்க்கு—அவ்வாறு உணர்தலினால் ஊற்றி லிருந்து நீர் மேலே கிளம்புதல் போல, உள்ளத்திலிருந்து இன்பம் மேலும் மேலும் பெருகி உளங்கனிந்து அதனால் அன்பு மீக்கூரும் அடியார்களுக்கு,

நற்றுணை ஆவர்—முடிவில் நிலையான பேரின்ப மளிக்கிற நல்ல துணையும் ஆகின்றார்.

### விளக்கவுரை:

இத் தேவாரப் பாட்டுச் சிவபெருமான் உயிர்களுக்கு எந்நிலையிலும் துணையாயிருந்து அவைகளுடைய பக்குவத்திற்கு ஏற்ப அருள் செய்கிறான் என்பதைக் கூறுகின்றது.

முன்—என்பது உயிர்கள் கேவல நிலையிலிருக்குங் காலத்தைக் குறிக்கிறது. அப்பொழுது சிவபெருமான் உயிர்களுடைய அறியாமையை நோக்கி இரக்கங்கொள்கின்றான். இவ் இரக்கம் சகல நிலையில் உடல் உட் கருவி உலக நுகர்வு (தனுகரண புவன போகங்)களைக் கொடுத்தற்குக் காரணமாயிருக்கிறது. இது சிவபெருமானுடைய சூக்கும ஐந் தொழில்.

முற்றுணை—(முன் + துணை) முற்றுணை.

மூவர்க்கு முதல்வன் தன்னை—அயன், மால், உருத்திரன் இவர்கள் முறையே உயிர்களுக்கு உடல் உட்கருவி உலகம் நுகர் பொருள்களை (தனுகரண புவன போகங்களை)ப் படைத்தல், காத்தல், அழித்தல் களைச் செய்து அருள் செய்கிறவர்கள். இவர்கள் தங்கள் தலைவனாகிய

சிவபெருமானால் அதிட்டிக்கப் பட்டு அவன் ஆணைவழி நின்று முத்தொழில்களைச் செய்கிறவர்கள் ஆதலின் சிவபெருமானை மூவர்க்கும் முதல்வன் என்று கூறினார்.

தன்—அசைநிலை.

சொற்றுணை—(சொல் + துணை) சொற்றுணை—சொல்லுக்குத்துணை. சொல் என்பது இங்கே திருவைந்தெழுத்து மந்திரச் சொல்லைக் குறிக்கின்றது. சேக்கிழார் அடிகள் திருஞான சம்பந்தர் புராணம் 1248 வது பாட்டில் "ஞான மெய்ந்நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொல்" என்று கூறியருளினார். திருவைந்தெழுத்து நாதம் ஆகலின், அந் நாதத்தை இயக்குகிற சிவசத்தி அவ்வைந் தெழுத்தின் உட்பொருளை யுணர்ந்து உருகி ஓதுகிறவர்களை ஒரு சிறிய தீப் பொறியுடன் சேர்ந்த கரித்துண்டை ஒருவன் ஊத ஊத அது கனிந்து கருநிறஞ் சிறிது சிறிதாக மாறிச் செந்நிறத் தீயாதல்போல மலம் சிறிது சிறிதாக நீங்கி அருளொளி விளங்கிச் சிவமாந் தன்மையை அடையச் செய்தலினால் அடிகள் அம்மந்திரச் சொல்லுக்குச் சிவபெருமானைத் துணை என்றார்.

சோதி—இவ்வாறு திருவைந்தெழுத்தை ஓதுகிறவர்களது உள்ளத்தில் சிவபெருமான் ஒளிவடிவாய் விளங்கித் துணைசெய்தலினால் அடிகள் சொற்றுணைக்குப் பின் சோதி என்று சிவபெருமானைக் கூறினார். சிவபெருமான் உயிர்களது உள்ளத்திற் சோதியாய் விளங்கித் தன்னைக் காட்டி உயிர்களுக்குத் துணைசெய்தலினாலே சோதி என்பதற்கு உள்ளத்தில் விளங்கும் ஒளியாய்த் துணைசெய்கிறவன் என்று பொருள் கூறப்பட்டது. ஆதரித்தே என்பதில் ஏ அசைநிலை.

உற்று (நோக்கி) உணர்ந்து—உற்று என்ற சொல்லுக்குப்பின் நோக்கி என்ற சொல் அவாய்நிலையால் வந்தது. மேலே கூறியவாறு ஓதுகிறவர் உள்ளத்திலே தோன்றுகிற ஒளியை விடயங்களைப்போல ஆராய்ந்து பாராமலும் தன்முனைப்புத் தோன்றாமலும் அசைவின்றிப் பார்த்தபடியே பார்த்துக்கொண்டிருந்து அந்த ஒளி மயமாய்ப் பெருகிப் பெருகி விழுங்கப்பட்டு நிற்க, அந்த ஒளி அகண்ட ஞானமாகிய மெய்யுணர்வு (சிவஞானம்) ஆகும். 'ஊன்கணோக்கி யுணர்வெனு மிமைதிறந்து' என்று அந்த மெய்யுணர்வு தோன்றுதலை அடிகள் 'கழித்திலேன் காம வெந்நோய்' என்ற தேவாரத்திலும், 'தம்மையும் நோக்கிக் கண்டு' என்று 'மெய்ம்மையாம் உழவைச் செய்து' என்ற தேவாரத்திலும் கூறி யருளினர்.

உற்று—என்ற சொல்லை யடுத்து 'உணர்ந்து' என்று கூறினார்.

உருகி ஊறி உள்கசிவு—அவ்வாறு அகண்டஞான ஒளியைக் காணப் பெறுதலினாலே உள்ளே முன்னே உணராத இன்பம் உண்டாகிறது. அந்த இன்பந் தோன்றுதலை அடிகள், அடுத்து 'உருகி ஊறி உள்கசிவு அடைதல்' என்று கூறினார். உருகி ஊறி உள்கசிவு அடைதல் என்பது உருவகம். ஒரு நீரூற்றி னுள்ளிருந்து நீர் வெளிக்கிளம்புதல் போல உயிர்கள் தமக்குச் சிவபெருமான் செய்துவரும் உதவியை நினைக்க நினைக்க இன்பமானது உள்ளத்தி னுள்ளிருந்து மீதூருகின்றது. இக் கருத்தினையே மாணிக்க வாசக அடிகள் 'ஊனினையுருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்தமாய தேனினைச் சொரிந்து' என்று திருவாசகத்திற் கூறியருளினர்.

நற்றுணை—நன்மை + துணை. நன்மை என்பது இங்கே பேரின்பத்தைக் குறிக்கிறது. ஒருவன் பிறருக்கு இன்பந்தருஞ் செயலைச் செய்தலே நன்மையாகும். எல்லா நன்மைகளிலுஞ் சிறந்த நன்மை பேரின்பமாதலின் அது பேரின்பத்தைக் குறிப்பதாயிற்று. நற்றுணையும் எனக் கூறற்பாலது நற்றுணையென உம் தொக்கி நின்றது. அடிகள் 'அருந்துணை' என்ற திருத்தாண்டகப் பாட்டில் பெருந்துணை என்று கூறியதும் அதே பொருளைக் குறிக்கும். நற்றுணையும் பெருந்துணையும் ஒருபொருளன.

முற்றுணை ஆயினானை—முதல்வன் றன்னை—சொற்றுணை ஆயினானை—சோதியை—என்பவைகளிலுள்ள—ஐ—அசைநிலைகள் ஆகின்றான் என முக்காலத்தையுங் குறிக்கும் நிகழ்காலத்தாற் கூறற் பாலன, ஆயினான் என, இயல்பு பற்றி இறந்த காலத்தாற் கூறப்பட்டது. நற்றுணைக்குப் பின் வரும் ஆவர் என்ற வினைமுற்றும் அவ்வாறே இயல்பு பற்றி எதிர் காலத்தாற் கூறப்பட்டது. (நன்னூல் — பொதுஇயல்—சூத்திரம் ௬௬) இவை காலவழுவமைதிகள்.

ஆயினான்—முதல்வன்—ஆயினான் என்னும் ஒருமைகளும், ஆவர் என்னும் பன்மையும் இப்பாட்டில் விரவி வருதல் ஒருமைப் பன்மை மயக்கம், இது பால்வழுவமைதி.

சிவபெருமான் உயிர்களுக்கு கேவலநிலையிலும் சகலநிலையிலும் சுத்த நிலையிலும் துணையாயுள்ளவன் என்பதும், அவனது சார்பின்றி உயிர்கள் எந்நிலையினும் எவ்வாற்றானுந் தனித்து இயங்கி வாழ்தல் முடியாது என்பதும் இப்பாட்டிற் கூறப்பட்டன. சகல நிலையாயினும் உயிர்களுக்குச் சிவபெருமான் நிவர்த்திகலை, பிரதிட்டாகலை, வித்தியாகலைப் போகத்தைக் கொடுத்தலை 'மூவர்க்கு முதல்வன்' என்பதனானும், சாந்திகலைப் போகத்தைக் கொடுத்தலை 'சொற்றுணை' என்பதனானும், சாந்தியா தீதகலைப் போ

கத்தைக் கொடுத்தலை 'சோதியை உற்று (நோக்கி) உணர்ந்து' என்பதனுனும் அடிகள் குறிப்பிட்டார். பிரகிருதிமாயையில் மண்(பிருதிவி) தத்துவத்திற்கு ஆதாரமாயிருக்கும் சுத்தமாயா நிவிர்த்திகலைக்கு அதிபதி அயனும் பிரகிருதிமாயையில் நீர் முதல் மூலப் பகுதிவரை 23 தத்துவங்களுக்கு ஆதாரமாயிருக்கும் சுத்தமாயா பிரதிட்டாகலைக்கு அதிபதி மாலும், வித்தியாதத்துவம் ஏழுக்கும் ஆதாரமாயிருக்கும் சுத்தமாயா வித்தியாகலைக்கு அதிபதி உருத்திரனுமாயிருத்தலினுல் 'மூவர்க்கு முதல்வன்' என்றதனுல் நிவிர்த்திகலை, பிரதிட்டாகலை, வித்தியாகலைப் போகங்கள் குறிப்பிடப்பட்டன என்று கூறப்பட்டது. தன்முனைப்பு அற்ற சாந்தத்தில் அருள் ஒளி விளங்குவதால் 'சொற்றுணை' என்றதனுல் மகேசன் அதிபதியாயிருக்கிற சாந்தி கலைப்போகம் குறிப்பிடப்பட்டது என்றும் சதாசிவன் அதிபதியாயிருக்கிற சாந்தியாதீதகலையில் சாந்தமும் அடங்கி இன்பம் ஒன்றே விளங்குதலால் சோதி உற்று உணர்ந்து என்றதனுல் சாந்தி யாதீத கலைப்போகம் குறிப்பிடப்பட்டது என்றும் கூறப்பட்டன. சாந்தியாதீதகலைக்கு அப்பால் சுத்த நிலையில் அடையும் பேரின்பத்தைச் சிவபெருமான் அருளுதலை அடிகள் 'நற்றுணை' என்றார்.

நிவர்த்திகலை பிரதிட்டாகலை விருத்திகள் அசுத்தாத்துவா போகத்துக்கு இடமாயும், வித்தியா கலைவிருத்தி மிசிராத்துவா போகத்துக்கு இடமாயும், சாந்திகலை சாந்தியாதீதகலை விருத்திகள் சுத்தாத்துவா போகத்துக்கு இடமாயும் உள்ளன. உயிர்களுக்கு இறைவன் நிவர்த்திகலை முதலிய ஐந்து கலைகளினுல் விளையும் போகத்தை அவைகளினது வேட்கைப்படி ஒன்றின்மேல் ஒன்ருய் நுகருமாறு செய்தும், பின்னர் அவற்றை ஒன்றின்மேலொன்ருய் வெறுத்து விடுக்குமாறு செய்தும், முடிவில் பேரின்பத்தைத் தந்தருளுகின்ருன் என்ற உண்மை இப்பாட்டிற் குறிப்பிடப்பட்டது.

முற்றுணை என்பதற்கு முன் என்ற சொல்லை முதனிலைத் தொழிற்பெயராகக் கொண்டு முன்னுதல் அதாவது நினைத்தலுக்குத் துணையாயுள்ளவன் என்றும், சொல் துணை என்பதை வினைத்தொகையாகக் கொண்டும் பொருள் கூறினுங் கூறலாம். ஆனுல் இப் பொருள்கள் பின்னேவரும் நற்றுணை என்பதற்குக் கூறும் பொருளுடனும் சிவபெருமான் மூன்று காரணவத்தைகளினும் துணை என்ற கருத்தூக்கும் பொருத்தமில்லை. ஆதலின் அச் சொற்ருெடர்களுக்கு மேலே கூறியவாறு பொருள் உரைக்கப்பட்டது.

இப் பாட்டுக்குத் திருவைந்தெழுத்து மந்திரச்சொல் உருவத்தில் வைத்துப் பொருள் கூறுமிடத்து முற்றுணை என்பதை ம ந வ ய சி என்றும், அயன் மாலுக்கு முதல்வன் என்பதை ந ம ய வ சி என்றும், உருத்திரனுக்கு முதல்வன் என்பதை சி வ ய ந ம என்றும், சொற்றுணை என்

பதை சிவய என்றும், சோதி உற்று உணர்ந்து என்பதை சிவ என்றும், நற்றுணை என்பதை சி என்றும் நாம் கூறலாம். இந்த ஐவகைத் திருவைந் தெழுத்து மந்திரங்களிலும் சி என்ற ஒரே எழுத்து உடனிருந்து துணையா யிருத்தலை நோக்குக.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

# தமிழ் அறிவியற் சொற்கள்

## Geometry - வடிவளவை

[திரு. பா. வே. மாணிக்க நாயக்கர்-காழி. சிவ. கண்ணுசாமி B.A.]

(௨௯௯-ம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| *Elevation* | ... | நிமிர்வடிவு. |
| *Section* அல்லது Sectional plan | ... | வெட்டுவடிவு. |
| *Survey* | ... | அளவெடுத்தல், அளத்தல். |
| *Surveyor* | ... | அளவெடுப்பவர், அளப்பவர். |
| *Approximate* | ... | ஏறத்தாழ, ஏறக்குறைய, கூடக் குறைய. |
| *To exhaust* | ... | கழிக்க, கழித்துப் போக்க. |
| *Exhaustion* | ... | கழித்துப் போக்கு. |
| *Proof* of exhaustion | ... | கழித்துப்போக்குத் தெரிப்பு. |
| Method of Proof by exhaustion | ... | கழித்துப்போக்குத் தெரிப்பு முறை. |

*Infer* என்பது Into, ferre என்ற இரண்டு சொற்களின் கூட்டிலிருந்து பெறப்பட்டதாகும். அதற்கு ஏதுவினுற் கொள் வது என்று பொருள். கோள்ள என்பதே Infer என்பதற்குத் தமிழ் நேர்பொருளாகும். If there is smoke it gives room to infer that there is fire - புகை இருக்குமானல் அங்கே நெருப்பும் உண்டென்று கொள்ளக்கிடக்கிறது.

| | | |
|---|---|---|
| Inference | ... | கோள். |

அயிர்ப்பு என்ற பொருளைக் கொள்ளாமோ வெனின், கொள்ளாம்; ஐயம் என்ற மற்றொருபொருளும் அதற்குளதாக லின். அளவை நூற்படி ஐயத்திற்கு இடமிருத்தல் கூடாதாகலின் கோள் என்ற மரபுப் பொருளே கோடற் குரியதாம்.

*Inequality* ... ஒவ்வாமை, சரியின்மை, போலாமை, நிகராமை, ஒப்பாமை.

Exception என்பதற்குப் புறநடை என்பது பொருள். இப்பொருள் பண்டை இலக்கியங்களிலும் இன்றை இலக்கியங்களிலும் வழங்கப்பட்டு வருவதொன்றாகும். எனினும் இகவு என்ற மற்றொரு பொருளே சுருக்கம் நோக்கி ஏற்றுக் கொள்ளற் பாலதாகும். To except இகக்க. That which is excepted இகவுபட்டது.

Through a given point there can be only one straight line parallel to a given straight line - குறித்த ஒரு குற்றின் வழியாகக் குறித்த ஒரு நேர்வரைக்கு ஒருபோகாக ஒரேவொரு நேர்வரைதான் இருக்கக் கூடும். இம் மொழிபெயர்ப்பில் "given" என்பதற்குக் கொடுத்த என்றும் "is known" என்பதற்கு தெரிந்துள்ளது என்றும் பொருள் கொள்ளாமல் முறையே "குறித்த" என்றும் "வழங்கப்படுகிறது" என்றும் பொருள் கொண்டிருத்தல் நோக்கற்பாற்று.

பிறமொழிக் கருத்துக்களைத் தமிழ் மொழியில் மொழிபெயர்க்கப் புகுங்கால் வழக்காற்றிலுள்ள தமிழ் மரபு கோடாமல் மொழிபெயர்ப்பது உளங் கொளற்குரிய தொன்றாகும்; இன்றேல் "இரட்சணிய சேனை"யைச் சேர்ந்த வெள்ளையர் இந்நாட்டு உடை யணிவதையும், கருநிறம்படைத்த ஒரு இந்தியப் பெண்மணி உடம்போடொட்டிய அரைப் பாவாடையும் மூடு கழுத்தில்லாத இரவிக்கையும் அணிவதை யொத்து நகைப்பை விளைவிப்பதாகும்.

*Cutting line* ... வெட்டும் வரை.
*Direction* ... போக்கு.
*Observation* ... குறிப்பு.
*Relativity* ... ஒப்புறவு.

Parallel straight lines have the same direction but differ in position.—ஒருபோகு நேர்வரைகள் ஒரே போக்கை யுடையன ; ஆனால் நிலை வேறுடையன.

வடிவளவை நூலில் "Parallel lines are those which meet at infinity"—ஒரு போகு வரைகளென்பன கந்தழியு மிடத்து முட்டுவன (ஒன்றோடொன்று) என்று கூறப்பட்டிருக் கின்றது. இது ஒரு முரண்பாடென்றே கூறல் வேண்டும். என்னை ? முட்டுதல் என்பது கந்துடைய ஒரு செயலாக, அத் தகைய ஒரு செயல் கந்தழிந்த ஒரு தொலைவில் நடைபெறுமென்று கூறுவது ஒவ்வாதாகலின். "ஒருபோகு வரைக ளென்பன கந்து அழியா வரையில் முட்டாதன" (Parallel lines are those which do not meet in definite limits) என்று எதிர்மறை யில் விதியமைத்துக் கொள்ளல் நீதியாகும்.

| | | |
|---|---|---|
| *Sense* | ... | புலம், புலன். |
| Sense of a line | ... | வரையின் புலன் |
| Same sense | ... | ஒரேபுலம் |
| Opposite sense | ... | எதிர்புலம் |
| *Movement* | ... | இயக்கம் |
| *Towards* | ... | நோக்கிய, முகமான. |

If K. P. is a straight line, movements from K towards P and from P towards K are said to be in opposite senses of the line K. P.—கா, பா, ஒரே நேர்வரையானால், "கா"விலிருந்து "பா" நோக்கிய இயக்கமும், "பா"விலிருந்து, "கா" நோக்கிய இயக்கமும் கா, பாவின் எதிர்புலத்தன எனப் படும்.

*Pivot* என்பது குழாய், முளை, ஊசி என்று பொருள்படும் Piva என்ற சொல்லடியாப் பிறந்ததாகும். அதற்குத் தமிழில் முளையாணி என்ற பொருள் கொள்ளலாம். ஆயினும் அறிவியலில் Pivot என்பது சுற்று-மையம் அல்லது சுழற்சி-மையம் என்றே பொருள் படுவதோடன்றி முளை அல்லது ஊசியென்பதற்குள்ளது போன்ற உருவிலக்கணமும் இல்லாததாயிருக்கின்றது. இப் பொருளைச் சுற்றுமையம் சுழல்மையம் அல்லது திருப்பமையம் என்ற சொல்லால் நன்கு விளக்கலாம்.

| | | |
|---|---|---|
| *Lever* | ... | நெம்பு. |
| *Experimental Proof* | ... | இயற்றல் தேரிப்பு. |
| *Equidistance* | ... | சரிதொலை, ஓர்தொலை. |
| *Asterisk* | ... | மீன்புள்ளி, உடுக்குறி. |
| *Result* | ... | ஈவு |
| To Summarise | ... | தொகுக்க |
| *Summary* | ... | தோகுப்பு |
| *Dependence* | ... | சார்பு |
| Dependent | ... | சார்ந்த, சார்பான. |
| *Independence* | ... | சாராமை, சார்பின்மை, தனிமை. |
| Independent | ... | சாராத, சார்பிலாத, தனியான. |
| *Oblique* | ... | சாய்வான |
| *Tabulate* | ... | நிரலாக்க, நிரலிட |
| *Flag Staff* | ... | கோடிமரம் |
| *Light-house* | ... | கலங்கரை விளக்கம். |
| *Ship* | ... | கப்பல், நாவாய், கலம். |
| Sailing ship or Steamer.. | | புகைக்கப்பல், புகைக்கலம், நீராவிக்கப்பல், நீராவிக்கலம், அலரிக்கப்பல். |

*Trapezium* என்பது ஒருபோகு சிறையுடைய நாற்சிறைஇ என்று கொள்ளப்பட்டாலுர், நாற்காலி என்பதையே அது நேர்பொருளாகக் கொண்டதாகும். எனவே இப்பொருள் சொல்லாக்கத்திற்குச் சிறிதும் பயன்படாதென்பது எளிதிற் போதரும். அறிவியற் சொற்கள் அமைப்பதில் சுருங்கச் சொல்லல் என்பது இன்றியமையாது வேண்டப்படுவதாகும். எனவே வழக்காற்றிலுள்ள ஏற்ற பண்பு குறிக்கும் சொற்களை வேண்டியவாறு திருத்தியமைத்துக் கொள்வதும் சொல்லாக்க முறையேயாகும். அறை என்று சொல்வது எதிர் சிறைகள் இரண்டும் ஒருபோகுடையதாகவும் முடக்குகள் நான்கும் செம்முடக்காகவும் இருக்கும் ஓர் இடத்தைக் குறிக்கும் என்பது யாவர்க்கும் ஒப்ப முடிந்தது. எனவே **Oblong** நேட்டறை என்று கொள்ளலாம். ***Square*** என்பது செவ்வறை. Irregular Quadrilateral சரி-

வறை (சரிவு அறை அதாவது சரிந்த (சாய்ந்த) ஒருபோகில்லாத சிறைகளை யுடையது) *Trapezium* ஒருசரிவு அறை (அதாவது எதிர் சிறை இரண்டு சரிந்தும் இரண்டு நேராகவும் இருப்பது). *Trapezoid* - ஒருசரிவாய்தம். Oblong என்பது ஆய்தம் என்றும் பொருள்படும். இரண்டு சிறைகளும் நேரொத்து ஒரு போகினவாகவிருக்கும் *Trapezium* இருசரிவு ஆய்தம் என்று பொருள்படும்.

*Superposition* ... மேலமைப்பு, மேற்பொருத்தம்.
Method of Superposition ... மேலமைப்புமுறை, மேற்பொருத்து முறை.
*Termination* ... இறுதி
To terminate ... இறுக்க
*Respectively* ... நிரல்நிரையாக, முறையாக, வரிசையாக.

Fixed - அசையாத, நிலைத்த. Fixed point - அசையாக் குற்று, நிலைக்குற்று.

To calculate ... கணக்கிட, கணக்கெடுக்க, அலகிட.
*Calculation* ... கணக்கீடு, கணக்கெடுப்பு, அலகீடு.
*Verification* ... சரிபார்த்தல், ஒத்துப்பார்த்தல்.
Limited ... வரைவுள்ள, எல்லையுள்ள, அளவுள்ள.
Unlimited ... வரையற்ற, எல்லையற்ற, அளவற்ற.
Simultaneous ... ஓரேதடவை, ஓரேவிசை.
*Clockwise* ... வலமாக
*Contra Clockwise* ... இடமாக
Indefinite ... அளவிடாத, அளவு தெரியாத, வரையில், வரம்பில்.
*Projection* ... வீழ்த்தல், வீழச்செய்தல்.
To project ... வீழ்த்த.
To project a point ... குற்றை வீழ்த்த

To projecct a ray ... கதிரை வீழ்த்த
To project a point on a line ... ஒரு வரையின்மீது ஒரு குற்றை வீழ்த்த
Orthagonal projection.. நெட்டுக்குத்து வீழ்த்து, செங்குத்து வீழ்த்து, செவ்வீழ்த்து.
Projection ... வீழ், வீழ்ச்சி, வீழ்கை.
An inclined projection of a circle in a plane is an ellipse. ஒரு தட்டின்மீது ஒரு வட்டத்தின் சாய்ந்த வீழ்ச்சி வட்ட வோரையாகும்.

Equal projection ... சரி வீழ்ச்சி.
*Constant* ... மாறிலி
*Odd* ... ஒற்றை
*Even* ... இரட்டை
*Number* ... எண்
Geometrical ... வடிவளவையியலான.
Mean ... பொது
Arithmetic means ... எண்ணளவைப்பொது.

——— (தொடரும்.)

# காழிக் கண்ணுடைய வள்ளலார்

[சீகாழி ஸ்ரீமான் ப. அ. முத்துத்தாண்டவராயபிள்ளை அவர்கள்]

(சிலம்பு ங, பால் ய்க, சுளசம் பக்கத் தொடர்ச்சி)

## ச. வள்ளலாரும் அவர் முன்னோரும் வள்ளல்களே

ஒன்றேயா மிரண்டேயா மொருவாத நிலையென்று
நன்றேயா முறைநவிற்று நாடகத்தின் நடித்திசைக்கு
மன்றேயா மறைப்பொருளை யறிவுறுவா னறிவிக்கும்
கன்றேயாங் கடற்காழிக் கண்ணுடைய வள்ளலே.

சுத்தாத்துவித சைவர் சொல்லும் முடிபும் வீரசைவாத்துவிதர் சொல்லும் முடிபும் ஒன்றேயாக அவரவர்கள் நூலுட் கூறியிருப்பினும், சுத்தாத்துவித சைவர்கள் வீர சைவர்களை ஐக்கவாதிகள் என்றும் வீரசைவர் சுத்தசைவரைப் பேதவாதியர்

என்றும் ஒவ்வொருவர் நாலை ஒவ்வொருவர் பாராமலும் மதியாமலும் ஒருவரை யொருவர் பரிப்ரமித்தும் தாந்தாம் பேசுவதே கோகில கோலாஹலம் என்று தம்மைத் தாமே கௌசல்யம் பேசிக்கொண்டு மித்தியாபஹாசம் செய்துவருவர். போதாதிசயம் உற்றவர்கள் எதத் விருத்தாந்தங்களைக் கேட்டு மந்தஸ்மிதஞ் செய்யாநிரார். ஒருவர் கொள்கையிலும் மற்றவர் கொள்கை மேலதோ கிழதோ எவ்வாறிருப்பினும் தாழ்ந்தோரை உயர்த்தப் பார்ப்பதும் அவரை உயர்த்தற்கு எற்ற உபாயங்களைச் சூழ்ந்து அவற்றை எற்றவாறு எற்ற சமயத்தில் உபயோகித்து அன்னாரை நல்வழிப் படுத்தலும் சான்றோர் கடமை. அகச்சமயம் எனவும் அகப்புறச்சமய எனவும் பின்னுள்ளார் வகுத்தன யாவும் சங்கேதத்தால் உண்மைப்பொருளை இனிது விளக்குதற்பொருட்டேயன்றி வீண் வாதத்தின் பொருட்டன்று. கிரியா விஷயங்களில் சிற்சில பகுதியினர்களுட் பேதங் காணப்படினும் அப் பேதமும் ஆகம வாக்கியங்களால் உண்டாயினவே. ஆகமங்களுள் உயர்வு தாழ்வு கருதுதல் சாம்பூநதத்தின் ஒரு பகுதிக்கும் மற்றொரு பகுதிக்கும் மாற்றுயர்வுதாழ்வு உரைத்து அறிதல்போலும். எவர் எவ்வாகமத்தின்வழித் தீக்கை பெற்றாரோ அவர் அவ் வாகமபூசை செய்தற்பாலரே. ஆகம முடிபைப் போலுமே வேதமுடிபும் ஒரு படித்தாகவே இருத்தல்வேண்டும், இவ்விரண்டும் இறைவன் அருண்மொழிகளே யாதலின். தர்க்கவாதம் புரிவார் தக்கவாறு புரிக. அங்ஙனமன்றிப் புறங்கூற்று மொழிகளாற் பயன் யாது? வேதாந்த சித்தாந்த முடிபுகளையும் அகச்சமய அபேத நிலைகளையும் அபேத உணர்ச்சியோடு கண்டறிதலே அறிவுடையோர்க்குத் தகுதி. ஜாதி சங்கற்பம் எட்டுணையும் புறங்கூற்றில் எழலாகா.

இதற்கு மாறாக அராஜக காலத்தில் அநேக குதர்க்க வாதங்கள் எழுந்தன. ஆனதுபற்றி அவ் வாதப்போர் நிகழாதவண்ணம் தடைசெய்தல் அறிவுடையோரைப் பொறுத்ததாயிற்று. அதுபற்றியே வீரசைவர்கள் கூறும் சிவாத்துவித சித்தாந்தம் சாமானிய சிவாத்துவித சித்தாந்தம்போல் நீரும் நீரும் கூடுவதுபோலன்று. நின்மலமாகிய திருவருளுக்கு முதன்மையாகிய சிவத்தில் உடலும் உயிரும் கண்ணொளியும் ஆதித்தனொளியுங் கலந்து நிற்றல் போலச் சிவாகமங்களிற் சொல்லும் இரண்டற்ற அத்துவிதச் சம்பந்தமே (அத்துவித வெண்பா. பக்கம். அ.) என்றும், ஐக்கிய

வாதிகள்போல் ஆணவ மலத்தைக் கொள்ளாத தன்று, சித்தாந்த சைவரைப்போல் ஆணவ மலத்தின் சொரூபாதி லக்ஷணங்களைக் கொண்டதே (அத்துவித வெண்பா) என்றும், அகப்புறச் சமயப் பகுப்பிற் சேர்ந்ததன்று என்றும், குருவாக வருபவர் உருத்திரன் அல்லர் சுத்த சிவமே யென்றும், வீரசைவர் நகுலேச பாசுபதம் (நகுலீச பாசுபதம் லகுலீச பாசுபதம்) அன்று வாதுளாதி சிவாக மோத்தமே என்றும், வீரசைவருள் ஒருசாரார் ஜங்கமர்களுட் சாதி பேதத்தையும் பஞ்ச சூதகாதிகளையும் பாராமை தீக்ஷா காலங்களிற் பிராயச்சித் தாதிகளாற் கழிக்கப்பட்டனவே யென்றும், சிவலிங்கதாரணாதி சம்ஸ்காரங்கள் வேதாகம யோக்தமே யென்றும் நிரூபிக்கவேண்டியதாயிற்று. சித்தாந்த சைவரும் சைவாகமப் பிரமாணியத்தைத் தாபித்து, ஆகமங்களை யன்றி வேதங்களை ஒப்புக்கொள்ளோ மென்னும் ஒருசார் சைவரையும் வேதம் பிரமாண நூல் என ஒப்புக்கொள்ளச் செய்து, சிவதீக் கையை ஜாதி, வர்ணம் ஆச்சிரமங்களுக் கேற்றவாறு பலவகைப் படுத்து, அந்தியேஷ்டியிலும் தகன ககனங்களுக்கு முறை வகுத்து, தீக்ஷாக்கிரையங்களுக்கும் பத்ததி செய்து, சைவசந்நி யாசத்தையும் நிலைநாட்டி, ஆசிரியத்தன்மை யதிகாரத்துள்பரார்த்த பூசைக்கு ஆதிசைவரையே நியோகித்து ஆன்மார்த்த பூசைக்கு இன்னின்ன வருணத்தார் இன்னின்ன நிலையில் யோக்கியரென எண்பித்து வேளாளருள் க்ஷத்திரிய வைச்யப்பிராயராகிய உயர் வேளாளருக்கு எல்லா நிலையினும் அதிகாரங்கொடுத்து, வீழ் குடி வேளாளருக்கு நைட்டிகாச்சிரமத்தில்மட்டும் அதிகாரங் கொடுத்து, அனைநிலை வகையர் வினைவல அடியார் முதலியோர்க் குத் தத்தம் தகுதிக் கேற்ற வரம்பை எல்லைப்படுத்தவேண்டியராயி னர். ஒரே கிளையினின்றும் பிரிந்த ஒரு பிரிவினர் பாஷண்ட நிரா கரணம் வரைதற்குக் காரணமும் எற்பட்டது. இவ்வாறு சம யோத்தாரணஞ் செய்யவேண்டிய ஆவசியகம் தத்தம் வர்க்கத் தார் தத்தம் சமயோல்லங்கனம் செய்யாமைப்பொருட்டே யன் றிப் பிறரை நிந்தித்தற் பொருட்டன்று. இப்போது யான் கூறிய வனைத்தும் அத்துவித வெண்பா, சித்தாந்த சிகாமணி, பிரபுலிங்க லீலை முதலிய வீரசைவ சித்தாந்த நூல்களையும் சிவஞான பாஷ்யம் முதலிய சுத்த சைவசித்தாந்த நூல்களையும் உற்றுப்பார்ப்பவர் களுக்கு விளங்கும். உண்மை யதிகாரத்தில் சிவஞான பாஷ்யத்திற்

கும் அத்துவித வெண்பா வுரைக்கும் திரிபதார்த்த லக்ஷணங்கள் கூறும்வகையில் எள்ளத்தனை பேதம் காணக்கிடையாது. திருவள்ளுவ நாயனார் திருவுருவத்தை மறைத்து அத்துவித வெண்பாவை வாசிக்கச்சொல்லிச் சுத்த சைவரோடும் பக்ஷபாதமின்றிக் கேட்பாராயின் திரிபதார்த்த சொரூப லக்ஷணங்களிற் றமது சித்தாந்தத்திற்குச் சிறிதும் வேறுபாடு காண்பாரிலர். மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் வியவகரிப்பன யாவும் வீரசைவ சித்தாந்தமோ சுத்த சைவ சித்தாந்தமோ வேதாந்தமோ சித்தாந்தமோ? தனித்து இன்னதென்று எவரேனும் துணிந்து சொல்லுவாரோ? சைவசித்தாந்தப்பொருள் பரம்பொருளாயிருத்தலின் உண்மை ஞானத்தை யாதொரு சமயத்திற்கும் மாறுபாடில்லாமற் போதரும் சமரச ஞானம் போதிப்பார் யாவரும் சைவார்த்தத்தையே போதிப்பர். ராஜாங்கத்தி லமர்ந்தது வைதிகசைவம். இவ்வண்ணமாக தவிரா விரோத சமய நூல்களின் பொருளை அவிரோதமாகத்தானே சைவார்த்தத்திற்றிரட்டிப் பரம கைவல்ய நவநீதத்தை நமது அங்கையில் அளித்த வள்ளலாரைக் கண்ணுடைய வள்ளலார் என்பேம். ஆகவே வேதாந்தம் சித்தாந்தம் சுத்தசைவம் வீரசைவம் என்று பிரித்து எடுத்து இவற்றுள் ஒன்றன் ஏற்றத்தாழ்வுகளை விதந்து ஓதாமல், ஒருபடித்தாக இவற்றின் முடிந்த முடிபு ஒன்றேயெனத் தங்கள் ஞானநுபவ நிலையிற் காட்டியருளிய கண்ணுடையாரும் இவரது குலமுதல்வர்களும் சிவஞானதானக் கண்ணுடைய வள்ளல்களே யாவர்.

(தொடரும்.)

---

# இடம்பட வீடிடேல்

[திரு. சேலை - சகாதேவ முதலியார்]

சிறுகக் கட்டிப் பெருக வாழ்—என்பது தமிழ் நாட்டின்கண் வழங்கிவரும் சிறந்த பழமொழிகளில் ஒன்று. இஃது இல்லற வாழ்க்கைக்கு இன்றியமையாத சிக்கன மென்னுஞ் சீரிய முறையைக் குறிக்கும். சிறுமையிற் பெருமையும் பெருமையிற் சிறுமையுமுளதாதலை யாம் உலகியலிற் கண்கூடாக் காண்கின்றோம். கிருட்டினன் துரியனது அரண்மனையை வெறுத்து விதுரனது சிறு குடிலை விரும்பிப்புக்கது யாவரு மறிந்ததொன்றே. பாலிற் சர்க்கரையிட் டுண்பவன் மனத்துயருடனும் கூழில் உப்பிட் டுண்பவன்

மனமகிழ்வுடனும் வாழ்ந்து வருதலைக் கண்டுங் கேட்டுமுள்ளோம். சிறு முயற்சியாற் பெரும்பய னடைவதும் பெரு முயற்சியாற் சிறு பயனடைவதும் மக்கள் அநுபவமே.

இருக்க இடமும் உண்ணச் சோறும் உடுக்க உடையும் மக்கட்கு இன்றியமையாதனவாம். இவற்றில் 'இருக்க இடம்' என்பதே யாம் எடுத்து எழுதப் புகுந்தது. உலகாநுபவத்தை யொட்டி மக்கட்கு அறம் போதிப்பதற் கென்றே அவதரித்த நமது ஔவைப் பிராட்டியார் இடம்பட வீடிடேல் எனக் கட்டளை யிட்டார். இச் செந்துறைச் செய்யுட்கண் படு என்னுஞ் சொற் குள்ள பொருளைத் தேர்ந்தறிதலே கட்டளையின் கருத்தை யறிந்த தாகும். இச் சொல் 'தேம்படு பனை' என்றதிற் போல மிக் குண்டாதலையும், 'படுகளம்' என்றதிற் போல மிக்குக் கெடுதலை யும் குறிக்கும். எனவே இச் செய்யுள் இடம் மிகைபடவும், பாழ் படவும் வீடுகளைக் கட்டுதல் கூடாது என்னும் பொருள் தந்து நிற்கின்றது. அஃதாவது இடம் உபயோக மற்றுக் கிடக்கவும், பாதுகாப் பற்றுக் கிடக்கவும் வீடுகள் கட்டப்படக்கூடா வென் பதே ஔவைப் பிராட்டியாரின் செவ்விய கட்டளை யாகும்.

நமரிற் சிலர் கைப்பொருள் மிக்குண்டாயபோது பல அறை களைக் கொண்ட இரண்டு மூன்று அடுக்குகளையுடைய மாளிகை களைச் சமைத்துக்கொள்கின்றனர். மாளிகையின் அளவுக்குத் தக்கபடி அதிற் குடியிருப்பவர்கள் எத்துணைப்பேர், தளவாடங் கள் (தட்டு முட்டுகள்) எத்துணையன என்பவாதி விடயங்களை அவர்கள் முன்னோக்கி எண்ணிப்பார்க்கும் வழக்கிலர். சில மூன் றடுக்கு மாளிகைகளில் மூன்றுபேர் குடியிருப்பதே அருமையாக முடிகின்றது. அத்தகைய மாளிகைகளிற் சிலவற்றின் பல அறை களில் இரவில் விளக்கொளியே காணப்படமாட்டாது. இது கவலை யின்மையானும், கைப்பொரு ளின்மையானும் நேர்வதாகும். பொரு ளுற்றபோது ஒரு நோக்கமு மின்றி ஆயிரக் கணக்காகப் பணச் செலவு செய்து பெரிய பெரிய வீடு கட்டுவதும், அஃது அற்றபோது அதனைப் பழுது பார்ப்பதற்கும் வழியின்றிப் பாழ்பட விட்டுவிடுவதும் வீண் ஆரவாரத்தையும் அவமானத் தையும் முறையே விளைப்பதாகும்.

சில செல்வவந்தர்கள் பெரு மாளிகைகளைச் சமைத்துக் கொண்டு ஆளனும் ஆட்டியுமாகவே அதன்கண் தனித்து குடிக்

யிருந்து வாழ்வர். சமைய லறை யொன்றும் மனிகைத் தட்டுமுட் டறை யொன்றும் துணிமணி யறை யொன்றும் ஆகிய மூன் றறைகளே அவர்களால் உபயோகப்படுத்தப்படுகின்றன. அம் மாளிகைக்கண் புத்தகசாலைக் கென்றும், கற்பதற் கென்றும், கற்பிப்பதற் கென்றும், புலவர் உவப்பத் தலைக்கூடுவதற் கென் றும், இன்னும் அறத்தோடியைந்த மற்றச் செயல்களுக் கென்றும் அறைகள் நியமித் துபயோகப்படுத்தப்படுவதில்லை. இத்தகைய மாளிகையில் வாழ்வோர் எய்தும் பயன் யாதோ!

எமது நண்பரொருவர் தமக்குத் தெரிந்த பெரு மாளிகை கள் பலவுண்டெனவும், அவற்றின்கண் நாட்டியுள்ள ஒரு தூணுக்குச் சென்னையின்கண்ணுள்ள புத்தக வர்த்தக நிலையங்க ளெல்லாவற்றையும் ஒன்றுசேர்த்து மதிப்பிட்டாலும் அமையா தெனவும், அவற்றின்கண் தேவார திருவாசக முதலிய இரண் டொரு முக்கிய நூல்களுக்கும் இடமில்லை யென்றும் நகையாடி னர். அளவில்லாத பொருளை யழித்துத் தமக்கும் பிறர்க்கும் நன்மை பயவாத உபயோகமற்ற மாளிகையில் வசிக்கும் செல்வ வந்தர்களைக் காட்டிலும், குடிசைகளில் குடியிருக்கும் ஏழைகள் எவ்வளவோ மேம்பட்டவர்களாவ ரன்றோ!

தமக்குள்ள மிகுதிப் பொருளைக் கல்வியிலாதல், மாட்டார்க் காதல், சாலைகளுக்காதல், வாணிபத்திலாதல், மக்கள் முன்னேற்ற மடையத்தக்க இவைபோன்ற பிறதுறைகளிலாதல் செலவழித் துத் தமது தேசத்தாரை மகிழ்வித்து அதனால் வரும் இன்பத்தை நுகராது மெத்தை மேடைகள் கட்டிவைத்துக்கொண்டு, தம்மைப் போன்ற செல்வவந்தர்கட்கே விருந்தூட்டியும், சுபாசுபங்களில் வீண் செலவு செய்து இடம்பங் காட்டியும், வீடேறிவரும் ஏற் பதற் கேற்றவர்களையும் தடிகொண்டு ஓட்டியும் வாழு மாந்தர்களை என் னென்போம்!

இவ்வாறு இவ்விடங்களைப் பாழ்படுத்தும் மாந்தர்கள் தன்மையை நோக்கி அவர்கட்கு அறிவூட்டக் கருதியே வித்தகர் போற்றும் நற்புலமை வாய்ந்த நமது ஔவையார் இவ்வருஞ் சிறு வாக்கியத்தைப் புகன்று வைத்தார். இவ்வாறே தமது சிறிய பெரிய நூல்களாகிய ஆத்திசூடி, கொன்றைவேந்தன் முதலியவற் றில் அவ்வம்மையார் நாக்கடிப்பாகவும் வாய்ப்பறை யாகவும் மக்கட்கு இருமையினும் உறுதி பயக்கும் சிறந்த நீதிகளைப் பசு மரத்தாணிபோல் அறைந்து வைத்துள்ளார். இந் நூல்களினுள்ள அவ்வையார் வாக்குக்களின் அருமை பெருமைகளை எடுத்துக் காட்டும் கட்டுரைகள் நமது செந்தமிழ்ச் செல்வியில் அடிக்கடி காணப்படும்.

——

# மூர்த்திநாயனுர்

(பண்டிட் A. நடராஜபிள்ளை அவர்கள்)

---

[முன் ௫௩௰-ம் பக்கத் தொடர்ச்சி]

## மூன்றுங் கூறு

## அமணராட்சி

நமது தமிழ் நாட்டில், அக்காலத்தில் வழங்கி வந்த சமயங்கள் பலவற்றுள் சமண சமயமும் ஒன்ருகும். இதனைக் கைக்கொண்ட கூட்டத்தார் சமணர் அல்லது அமண ரெனப்படுவர். இச் சமயம் வடபாலுள்ள மகத நாட்டிற் பிறந்த மகாவீரன் என்ற பெரியார் ஒருவரால் தோற்றுவிக்கப்பட்டது. இக் கொள்கை தோன்றி இற்றைக்குச் சற்றேறக்குறைய இரண்டாயிரத் தைஞ்ஞூறு ஆண்டுகளாகின்றன. இது நாளடைவிற் பெருகி, வடநாட்டிலிருந்து தென்னுட்டிலும் புகத் தொடங்கியது. ஆயினும், சைவ சமயமாகிய ஞாயிற்றின்முன் சமணவிருள் நிலக்க இயலாது போயிற்று.

மூர்த்திநாயனுர் காலத்தில், சமண சமயம் தென்னுடுகள் பலவற்றிற் புகுந்து செழித்திருந்தது. அமணப் பெரியோர்கள், ஆங்காங்குள்ள பேரரசர்களைத் தமது சமயத்தே புகச்செய்து, அவர்களுடைய பேருதவியினுல் நாடெங்கும் சமண சமயத்தைப் பரப்பத் தொடங்கினுர்கள். வடுகர்கள் நாடாகிய கருநாடகத்தில், சமணசமயம் புகுந்து, அரசன்முதல் ஆண்டிவரையிலுள்ள அனைவரையும் அமணராக்கியது. அங்கிருந்த வட நாட்டு அமணர்கள் தமிழ் நாடுகளின் செழிப்பையும், சைவ சமய வளர்ச்சியையுங் கண்டு பொருமை கொண்டனர். அவர்கள் செய்த சாம பேத முதலிய உபாயங்களால் மயங்கிய சேர மன்னனும், சோழ மன்னனும் சமண சமயம் புகுந்து, தங்கள் நாடுகளை அமண நாடுகளாக ஆக்கினுர்கள். பாண்டியன் உண்பதிலும் உறங்குவதிலும் காலத்தைக் கழித்து அரசியற் காரியங்களைக் கவனியாதிருந்தமையாலும், பாண்டி மக்கள் சைவ சமயத்திற் பற்று மிகுதியுங்கொண் டிருந்தமையாலும் அமணர்கள் பாண்டிநாட்டிற்

சமண சமயத்தைப் புகுத்தவேண்டிச் செய்த உபாயங்கள் பலிக்கவில்லை.

அமணர்கள் படை கொண்டாயினும் பாண்டி நாட்டிற் சமண சமயத்தைப் புகுத்தவேண்டு மென்ற விருப்ப மிக்குநின்றனர். அதற் கியைந்தபடியே பாண்டியனும் படைவலு வற்றிருந்தனன். இந்நிலையுணர்ந்த அவர்கள் படைவன்மை மிக்கோனும், சமண சமயப் பற்றுடையோனு மாகிய கருநாடக மன்னனைப் பாண்டி நாட்டின்மீது படையெடுக்கும் வண்ணம் தூண்டினார்கள். முன்னரேயே சமண சமயத்தைச் சார்ந்து நின்ற சேரமன்னனும், சோழ மன்னனும் அத்தூண்டுதலை வலுப்படுத்தினர். ஆகவே, பாண்டிய நாடு முற்கண்ட மூவேந்தர்களாலும் முற்றுகை இடப்பட்டது. பாண்டியன் அப் போரினை எதிர்பாரா திருந்தமையாலும், பகைவர்களின் படைமிகுதியாலும், துணைவர் எவரு மின்மையாலும் விரைவில் தோல்வியடைந்து தொலைந்தான்.

வெற்றிக் கொடி நாட்டிய கருநாடக மன்னன் அமணர்களுடைய ஆரவாரங்களுக் கிடையே மதுரைக்குள் புகுந்தான். வேறு போக்கில்லாத பாண்டி மக்கள் அவனை வரவேற்றுப் பணிந்தனர். அவன் சில நாட்கள் அங்கே தங்கியிருந்து, தனது இரண்டாவது மகனைப் பாண்டி நாட்டு மன்னனாக்கி முடிசூட்டிவைத்தான். அமணப் பெரியார்கள் பலர் அவனுக்கு அமைச்சர்க ளாக்கப்பட்டனர். கருநாடக மன்னன் பின்னுஞ் சிலநாளிருந்து பாண்டி நாட்டில் அமைதியை உண்டாக்கிக் கொடுத்துவிட்டுக் கருநாடகத்திற்குச் சென்றான். முடிசூட்டப்பட்ட இளமகனோ எடுப்பார் கைப்பிள்ளையைப் போன்றவன். ஆகவே, அமண அமைச்சர்கள் அவனைச் சூத்திரப் பாவையைப்போல் ஆட்டுவித்தார்கள். பெயரளவில் அரசனாகிய கருநாடகமன்னன் மகன் எவ்விதக் கவலைகட்கும் இடமில்லாதவனாய்க் காமமாகிய கள்ளையுண்டு, அரண்மனையில் அடைபட்டுக் கிடந்தான்.

அமணத் துறவிகள் பலர் பிறநாடுகளிலிருந்து அரசாங்கச் செலவில் வரவழைக்கப்பட்டார்கள். அவர்கள் பாண்டிநாடெங்கும் நிறைந்து, சமண சமயத்தைப் பரப்பலாயினர். அமண அமைச்சர்கள் அரசாங்க அலுவல்களிலுள்ள பல சைவ சமயிகளை விலக்கிச் சமண சமயிகளை அமர்த்தினர். நாட்டிலுள்ள எல்லாச்

சைவ சமயிகளுக்கும் சமயவரிகள் அவர்களால் ஏற்படுத்தப் பட்டன. சமண சமயத்தைச் சார்வோர்களுக்கு இல்வாழ்க்கை நடத்த வேண்டிய பொருளும் மனையுங் கொடுத்து, மணமுஞ் செய்துவைப்பதாக நாடெங்கும் பறைகள் முழங்கின.

இவற்ருல், நெஞ்சங் கலங்கிய பாண்டி மக்களிற் பலர் அரசாங்க அலுவல்களை வேண்டி அமணராயினர். சிலர் சமயவரிகளுக்கு அஞ்சிச் சமண சமயம் புக்கனர். வேறு சிலர் மண்ணை விரும்பி மழுங்க மொட்டையாயினர். மற்றுஞ் சிலர் பெண்ணை விரும்பிப் பீலி கைப்பிடித்தனர். ஒருசிலர் பொருளை விரும்பி அருளைக் கைவிட்டனர். இன்னுஞ் சிலர் அமண அமைச்சர்களின் அருள்வேண்டிச் சமண் குழியிற் சார்ந்தனர். அமணத் துறவிகளின், "காறு வுயிர்க்கும் கையற் றேங்குவோம்," என்ற வீணும் மொழிகளிற்பட்டு மயங்கிய பாண்டிமக்கள் மிகப்பலர். இம்முறைகளாற் பாண்டிமக்களிற் பெரும்பான்மையோர் அமணர்களாக மாறினுர்கள். மாறவே, சிவலோகமாகிய தென்பாண்டி நாடு, அமணர்களின் நாடாகிய அவலோக மாகியது. ஊர்கள் தோறும் மயிற்பீலிக் கைகளும், நீர்க்காக உறித் தோள்களுமுடைய சமண சமயிகளின் கூட்டம் பெருகியது.

அரசாங்க நிலையமெங்கும் அமணர்களே நிரம்பினர். மதுரை மாநகரத் தெருக்களெல்லாம் அமணர்களின் வாழ்விடங்களாயின. படைவீரர்கள் அனைவரும் அமணர்களே யானுர்கள். நிலத்திற்கு உடையோர்கள் பலரும் சமண சமயத்திற் புகுந்தனர். சைவ சமயிகளின் நிலங்கள் முதலியன அமண அரசாங்கத்தாரால் பறிமுதல் செய்யப்பட்டன. மதுரைமாநகரில் சைவ சமயிகளின் தொகை மிகச் சுருங்கியது. சுருங்கிய சைவ சமயிகள் அமணர்களின் பெருக்கங் கண்டஞ்சி, சொக்கலிங்கப்பெருமான் திருக்கோயிலினை யடுத்த ஆடி வீதிகளிலுள்ள மண்டபங்களிலும், மடங்களிலும் குடிபுகுந்தனர். கோயிலுக்குப் பாண்டிய மன்னர்களால் முன்னர் விடப்பட்டிருந்த இறையிலி நிலங்கள் யாவற்றையும் அமண அமைச்சர்கள் பறிமுதல் செய்துவிட்டனர். முன்னர் நடந்த திருவிழாக்களெல்லாம் நின்றுபோயின. ஆயினும், ஆடி வீதிகளிற் குடிபுகுந்த சைவ சமயிகள் கோயிலில் நடத்தவேண்டிய ஆறுகால பூசைகளைமட்டும் தம்மாலியன்றவளவு தவருமல் நடத்தி

வந்தனர். நமது மூர்த்திநாயனாரும் அவர்களோடு கூடியிருந்து, தமது சந்தனக் காப்புத் திருப்பணியைத் தாழாது நடத்திவந்தார்.

இவ்விதமாகச் சில சைவ சமயிகளும் மூர்த்தி நாயனாரும் புறச் சமயமாகிய புயற்காற்றுக்கு முன்னே, சைவ சமயமாகிய தனி விளக்கினை அவியவிடாது காப்பாற்றிக் கொண்டிருந்தனர். இதனைக் கண்ட அமண அமைச்சர்களுக்கும், அமணத் துறவிகளுக்கும் பொறாமைத்தீப் பொங்கி யெரியலாயிற்று. அதனால், பல சமயக் கட்டுப்பாடுகள் தோன்றலாயின. அமண வணிகர்கள் ஆடி வீதி களில் வாழும் சைவ சமயிகளோடு பண்டமாற்றுச் செய்ய மறுத்தனர். அமண அம்பட்டர்களும், வண்ணார்களும் இவர் களுக்குத் தமது தொழிலைச் செய்யத் தயங்கினார்கள். ஐயோ! சைவ சமயிகள் என்செய்வார்கள்? யாவரும் சொக்கலிங்கப் பெருமான் திருமுன்பிலே சென்று வீழ்ந்து, தியங்கி யழுதார்கள்; அமணராட்சியை மாற்றி, ஐயனாட்சியை உண்டாக்க எம்பெருமானை வேண்டிக்கொண்டார்கள்.

எங்கும் நிறைந்த இறைவனாகிய சொக்கலிங்கப் பெருமான் அவர்கள் வேண்டுகோளுக்குச் சிறிதே இரங்கினான். அதனால், அவர்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களும், உடைகளும் பெருமானை வழிபடற்குரிய பூக்கள் முதலிய பொருள்களும் அக் கோயிலினகத்தே கிடைத்தன. அவைகளாற் பெருமகிழ்வு கொண்ட சைவ சமயிகள் சொக்கலிங்கப் பெருமானையும் கயற் கண்ணம்மையாரையும் முறையே வழிபட்டு, உண்டு உடுத்து வாழ்ந்து வந்தனர். அம்பட்டனின் மயிர்வினையும், வண்ணானின் வெள்ளையும் அவர்களுக்குக் கிட்டாமையால், அவர்கள் பொற்று மரைக் குளத்தில் துவைத்துடுத்த பொன்போன்ற ஆடையாலும், வளர்ந்து நிறைந்த மயிர் முடிகளாலும், பெருமானிடத்தே போன்பு மிக்க உள்ளத்தாலும் உண்மைத் துறவிகளாய் உயர்ந்து காணப்பட்டார்கள். அமணர்களுக்கு இவர்களைக் காணக் காண அருவருப்பு அதிகமாயிற்று. அவர்கள் சைவ சமயிகளுக்கு வேறு எவ்விதமான இடுக்கண் செய்யலாமென எண்ணலாயினர். அமண அமைச்சர்கள் மதுரைமாநகரிலுள்ள அமணத் துறவிகளையும், அமணக் குடிமக்களையும் அரண்மனையிற் கூட்டிச் சைவ சமயத்தை யொழிப்பதற்கு யாது செய்யலாமென ஆராய்ந்தார்கள்.

அமணர்களிற் சிலர், திருவாலவாயினைச் சிதைத்து விட்டால் சைவ சமயம் தானே சிதையும் எனச் செப்பினர். வேறு சிலர், சிவனடியார்களைச் சிறையிடல் வேண்டுமென்றனர். இன்னுஞ் சிலர் சைவ சமயிகளை ஆலவாயினின்றும் அகற்ற வேண்டு மென்றனர். பலர், இம்முறைகள் அருளினை மேற்கொண்ட தமது சமண சமயத்திற்கு அடுக்கா என மறுத்தனர். முடிவாக அமண அமைச்சர்கள் மூர்த்திநாயனர் காட்டிற்குச் சென்று சந்தன மரம் வெட்டுவதைத் தடுப்பதெனத் தீர்மானித்தனர். அமணர்கள் தமிழ் நாட்டிற் சமண சமயத்தைப் பரப்பிய முறை முற்கண்டவாறு தவறு வழியிலாயினும், அச்சமயத்தின் கண்ணுள்ள, "காணுவுயிர்க்கும் கையற்றேங்கல்—சிறிய வுயிர்களிடத்திலும் அருள் கொண்டு நடத்தல்" என்னுங் கொள்கை பல பெரியோர்களாலும் கொண்டாடப்பட்ட வொன்றாகும். இதனாலே தான் இச்சமயம் தோன்றிய தொடக்கத்திலேயே பல பெரியோர்கள் இதன் கொள்கையைப் போற்றிப் பின்பற்றினர்கள். சமண சமயம் வடநாடெங்கும் தழைத் தோங்கியது. தமிழ்நாட்டிற் புகுந்த அமணர்களோ, தும்பை விட்டு வாலைப் பிடித்த வாலாறு போல, அருளினைக் கைவிட்டு, மருளாகிய சமயத்தைப் பரப்புவதில் மட்டுங் கருத்தைச் செலுத்தலானர்கள். அதனாலன்றோ தென்னாட்டிற் சமண சமயம் பிற்காலத்திற் காண்பரிதாயிற்று?

(தொடரும்)

---

துறையூர்

## தமிழ் மாணவர் மகாநாடு

திறப்பாளர்

இராவ்சாஹிப்

கோவை ம. இராமச்சந்திர செட்டியார் அவர்கள் செய்த

## விரிவுரைக் குறிப்புக்கள்

### அன்றும், இன்றும்

தமிழர்கள் உறங்கத் தொடங்கினதற்கு முந்தி எவ்வாறு இருந்தனர், உறங்கி விழிக்கத்தொடங்கும் இக்காலத்தில் எவ்வாறு இருக்கின்றனர் என்ற இரு தோற்றங்களையும் கூர்ந்து

நோக்குவது பயன்தரத் தக்கதோர் ஆராய்ச்சியாகும். ஆனால் ஒருசிலர் பண்டைப் பெருமைகளைப்பற்றிப் பேசுவதில் பயனில்லை, இனி நடக்கப்போகும் செய்கைகளையே ஆராயவேண்டும் என்பர். அக்கொள்கை சரியே என்றாலும் நம் பண்டை முறைகளை நடந்தபடி அறியாவிடில் இனி நடக்க இருக்கும் முறைகளை வெற்றி தரத்தக்கபடி நாம் கையாள முடியாது. ஆகவே பண்டை வரலாறும் ஆராய வேண்டியவைகளில் ஒன்றாகும். தமிழர் உறங்கின தற்குமுன் படிப்பு முறைகளை ஆராய்ந்து தேர்ச்சி பெற்று அகத் தத்துவங்களுக்கு இணங்க அதன் இலக்கணங்களை நன்கு வகுத்திருந்தனர். தற்காலத்தில் கல்வி முறைகளில் தேர்ச்சிபெற்ற மேற்கு நாட்டார்களோ அக்காலத்தில் கல்வி என்னும் பதத்தையும் அறியாத காட்டுமிராண்டிகளாக இருந்தனர். அவ்விதம் உன்னத நிபுணத்துவம் வாய்ந்த தமிழர்களோ தற்போது 100-க்கு 90 விழுக்காடு எழுத்துவாசனை அறியாத அறிவிலிகளாக இகழப்படுகிறார்கள். உலகமெல்லாம் புகழப்பெற்ற ஆராய்ச்சிகளைக் கொண்ட அவர்களது தமிழ்மொழியோ அவர்கள் மக்களாலும் அவர்கள் போற்றும் பல்கலைக் கழகத்தார்களாலும் புறக்கணிக்கப்பட்டு நிற்கின்றது. மேற்கத்திய நாடுகளில் அரசியல் தத்துவத்தை அறியாது தடியெடுத்தவன் தண்டக்காரன் என்ற முறையில் கொலை களவு புரியும் வாள்வீரர் கையில் அடங்கியிருந்த முற்காலத்தில் நம் தமிழர் அரசியல் தத்துவங்களை நன்கறிந்து ஆறங்கம் கொண்ட குழுவினர் மதிமொழிக் கேற்ப மன்னர்கள் செங்கோல் செலுத்திவந்தனர். தற்காலத்திலோ தமக்கென்று தன்னரசு இன்றிப் பிறராசிலும் பெரும்பதவி கிட்டும் வகையின்றிச் சீர்குலைந்து தவிக்கின்றனர். வாணிபத்தில் சிறந்து விளங்கும் பல நாட்டார்கள் வாணிபத்தின் பொருளும் அறிந்திராத பண்டைக்காலத்தில், தமிழ்ப் பெருமக்கள் நெடுந்தூர நாடுகளுக்குக் கலங்கள் ஏறிச் சென்று "திரைகடல் ஓடியும் திரவியம் தேடு" என்ற மொழிகளுக் கிலக்காகப் பல பொருள்களிலும் பெரும் வர்த்தகஞ்செய்து வந்தனர். தற்காலம் நகரத்தார் தவிர ஏனையோர் கப்பல் ஏறுவது என்றால் பெரும் பாவமாக நினைக்கின்றார்கள். இந்த மூளைச் சிதைவு என்று வந்ததோ, எவ்வாறு தோன்றிற்றோ? முற்காலத்தில் நாட்டு அன்பில் ஈடுபட்டு அதன் பெருமையைப் பிற நாடுகளுக்குச்சென்று புகுத்தியும் பொருளாதார விரிவை எண்ணிப் பிற

நாடுகளைப் பிடித்துக் குடியேற்றினதும் இப்போது நினைத்தால் கனவு கண்டதுபோல் ஆகிவிட்டன. இது உண்மையோ என்றும் நம் பெரியார்கள் ஐயமுறவும் செய்வார்கள். சாவகம், பலி, கம்போடியா என்ற தீவுகளுக்கும் நாடுகளுக்கும் அழைத்துக் கொண்டு சென்று காட்டினுலொழிய இவைகளை நம்புவார்களா? நம் முன்னோர்கள் ஒரு மொழி, ஒரு வகுப்பு, நீதியின்பால் பட்ட ஒரு சட்டம் இவைகளைக்கொண்டிருந்தார்கள் என்றால், பல மொழிகள், பல ஜாதிகள், பல சமயங்கள், இயற்கை நீதி யினை உருட்டித்தள்ளும் பல சட்டதிட்டங்கள் இவைகளைப் புகுத்தப்பெற்றிருக்கும் நெல்லிக்காய் மூட்டையினர் ஆகிய தற் காலத்தமிழர் தம் முன்னோர்களின் கொள்கைகளை எவ்வாறு அறி வார்கள்? தன் கணவன் போர்க்களத்தில் எய்போல விழுந்து உயிர் விட்டதைக்கேட்ட பெண்மணி தன் கொங்கையில் பால் அருந் தும் மகனைப் பிடித்து முன்னிறுத்திக் கச்சுக்கட்டி வாளைக் கை யில் கொடுத்துப் போர்க்களத்திற்குச் செல்லும்படி கட்டளையிட்ட இந்நாட்டில் பட்டாசு வெடி என்றால் பத்தடி பயந்தோடும் நிலைக்கு வந்துவிட்டோமல்லவா? இத்துணை மாறுபாடு எவ்வாறு வந்தது? நமது உறக்கம் இத்துணை இழிவினைத் தந்துவிட்டதா? இனியா வது இப்பெரும் உறக்கத்தினின்று எழுந்திருங்கள், விழியுங்கள், நோக்குங்கள், அறியுங்கள், ஊக்கம் கொள்ளுங்கள், முயலுங்கள், செய்கைகள் செய்யுங்கள்!

## மொழிச் சிறப்பு அறிதல்

தற்காலத்தில் அரும் பெரும் மொழிகள் எனப் பாராட்டப் படும் சிலநாட்டுமொழிகள் எழுத்து வடிவம் பெறுதற்கு முன்பே தமிழ்மொழி பல துறைகளிலும் கலைகளிலும் தலைசிறந்து விளங்கி வந்தது. என்றாலும் தமிழ்மொழி பயிலும் நம் தென் நாட்டுப் பல்கலைக்கழகம் தமிழ் மொழியை வெகு ஆண்டுகளாகச் சிறந்த மொழித் தொகுதிகளில் சேர்த்தது கிடையாது. அக் கழ கத்தின் கூட்டம் ஒன்றில் தமிழ் மொழிக்காக ஓர் ஆராய்ச்சிப் போதகரை ஏற்படுத்த வேண்டும் என்று கொண்டுவந்த தீர்மானத் தின்போது ஒரு பிரசித்தி பெற்ற உறுப்பினர் தமிழ் மொழியில் வல்லுநர் ஒருவரும் தென்னாட்டில் கிடையாது என்றும் தமிழ் நன்கு அறிந்த ஒருவர் பாரீசு நகரத்தில் தான் இருக்கிறார் என்றும்

அவரைத் தருவிக்க முடியாததாலால் தமிழுக்கு ஒரு போதகஸ்தானம் வேண்டிய தில்லை யென்றும் எதிர்த்தார். இவ்விதப் பேச்சும் பேசத் தக்க ஓர் அதோகதியில் தமிழ் மொழி வந்து விட்டது பரிதவிக்கத் தக்கதே. தமிழ் மொழி ஆராய்ச்சிக்குப் பல்கலைக் கழகம் மாத்திரமே யன்றிப் பல ஆராய்ச்சிக் கழகங்களும் நாடெங்கும் ஏற்படுத்தல் வேண்டும். அவைகளில் பெரும் போதகர்களே யன்றி பல ஆராய்ச்சி மாணவர்களும் பாடுபடல் வேண்டும். பாடுபட வேலை இல்லாமல் இல்லை; அப் பாடுபடக்கூடிய வேலையை அறிந்தார்களில்லை: பாடுபடுவார்களும் இல்லை என்பதே பெருங்குறைவு.

## மாணவர்க்கு உதவி

ஆராய்ச்சி முறையில் பாடுபடும் மாணவர்களுக்கு அவர்கள் மூளையைச் சரியாகச் செலுத்தும் வல்லமையாவது நாம் தரல்வேண்டும். அதற்காக அவர்கள் உண்ண உணவும், உடுக்க உடையும் அளிப்பதற்கு ஏற்பாடுகள் செய்தல் வேண்டும். பல்கலைக் கழகத்தாரும் மடாலயங்களுமே யன்றி ஸ்தல ஸ்தாபன சங்கத்தார்களும் உதவி புரிய முன் வருதல் வேண்டும். வாணிபச் சங்கத்தார்களும் தம் இலாபத்தில் ஒரு பகுதி இப்புனிதவேலைக்கு ஒதுக்கிவைத்தல் வேண்டும். ஊர்ச்சபையார்கள் முற் காலத்தில் நம்நாட்டில் கோயில் பரிபால னத்திற்கும் சமயப் பிரசாரத்திற்கும் பாடசாலைகளுக்கும் உதவி புரிந்ததாகக் கல்வெட்டுக்கள் புகழ்கின்றன. தற்கால ஊர்ச்சபைகள் இவ்வகையில் எத்துணைப் பாடுபடுகின்றன? அவைகளின் வருவாய்களில் 100-க்கு 15மடங்கேனும் கல்விக்கு ஒதுக்கி வைத்து, மாணவர்களின் உதவிக்காக ஒரு பெரும் பாகத்தை உபகரிக்கவும் முன் வரல்வேண்டும். நம் அளவிறந்த தேவாலயங்களில் இதற்காக என் ஒருபாகம் நிறுத்தி வைக்கக்கூடாது? தாசிக்கும் வேசிக்கும் பாணப் புகைக்கும் செலவழிக்கும் பணத்தில் ஒரு பகுதியையாவது மீதம் செய்து மாணவர் படிப்புக்கு என் தரல் கூடாது?

## சரித ஆராய்ச்சி

தமிழர்களோ பண்டைக் காலத்து நாகரீகம் வாய்ந்தவர்கள். அவர்களது, இனிய தமிழ் மொழியோ இத்துணைப் பண்டையது

எனக்கூற அளவும் கிடையாது. ஆனாலும் அவைகளின் பண்டைய மேன்மையைக் காட்டக்கூடிய ஒரு தக்க சரித்திரமாவது வாலாறு வது இருக்கிறதா? கணக்கில்லாத பெரும் புலவர்கள் தமிழ் நாட்டில் தோன்றியும் ஒரு கவி சரிதத்தை எவரேனும் எழுதினர்களா? சமீபகாலத்தில் தோன்றிய தெலுங்கு, வங்கம், இந்தி, இம்மொழிகளுக்கு எத்துணைச் சிறந்த வரலாற்று நூல்கள் வெளிவந்துள்ளன? இன்னமும் அவைகளைக் காலத்திற் கேற்றபடி விருத்தி செய்ய எத்தனை சங்கங்கள் முன் வந்துள்ளன? அப்படியானால் தமிழ் மொழியில் சரிதம் எழுதக்கூடிய பொருள்கள் இல்லையோ என ஐயுறலாம். அதுவன்று. பல்லாயிரக் கணக்கான பொருள்கள் ஏடுகளிலும் கல்லெழுத்துக்களிலும் மறைந்து கிடக்கின்றன. அவைகள் உள என்ற ஒரு சிறு சங்கதியையும் தமிழர்க்கு மேற்கு நாட்டு நிபுணர்கள் சொல்லவேண்டி வந்தது. நம் ஆலயங்களில் இருக்கும் பல்லாயிரக் கணக்கான கல்வெட்டுக்களில் நம் நாட்டுச்சரிதம், நம்மொழிச் சரிதம் அழியாமல் கிடக்கின்றன. சமீபத்தில் நிலை பிறழ்ந்த அன்பினால் சில சமய அன்பர்கள் ஆலயங்களைப் புதுப்பிக்கும்போது சில கல்வெட்டுக்களை அழித்து விட்டார்கள். அன்னார் அவைகளின் உண்மையான மதிப்பை அறிந்தவர்கள் அல்லர். அவர்கள் புதுப்பிப்பதற்குச் செலவழித்த இலட்சக்கணக்கான பணங்களும் அவர்கள் அழித்த ஒரு கல்வெட்டிற்கு ஈடாகாது. இதுகிடக்க, இக்கல்வெட்டுக்களை ஆராய்ந்து அறிந்து நம் நாட்டுச்சரிதத்தை வெளியிடுவது யாருடைய கடமை? நம் அருமை மாணவர்களின் கடமையேயாகும். அரசியலார்கள் சில உத்தியோகஸ்தர்களை நியமித்துக் கல்வெட்டுக்களைப் பிரதி எடுத்துப் பதிப்பிக்கச் செய்துள்ளார்கள். அவர்கள் பிரதியெடுத்துப் பதிப்பித்துள்ளது 1900 ஆண்டுவரைக்குமே ஆகும். மற்றும் 5 ஆண்டுகளின் கல்வெட்டுக்கள் இன்னமும் அச்சில் இருக்கின்றன. ஆகவே சென்ற முப்பது ஆண்டுகளின் கல்வெட்டுக்களும் மாணவர்களின் ஆராய்ச்சிக்கு எட்டாமல் இருக்கின்றன. ஆனால் ஆந்திரர்களோ இத்தனை மந்த கதியைப் பொறுக்காமல் அரசியலாருடன் வாதாடித் தாம் தனியாகப் பதிப்பிப்பதற்காக அநுமதி பெற்றிருக்கிறார்கள். கன்னட மொழிக்கு மைசூர் அரசியலார் வேண்டிய மட்டும் உதவிபுரிந்து வருகிறார்கள். தம் நாட்டில் உள்ள சகல கல்வெட்டுக்களைப் பதிப்பித்ததன்றி கல்வெட்டுக்களில் கிடைத்துள்ள

செய்யுள்களைக் கால வரிசையாகப் பதிப்பித் துள்ளார்கள். இத னாலே செய்யுளிலும் மொழியானது எவ்வாறு அபிவிருத்தி அடைந்தது எனக் கண்டு கொள்ளலாம். தமிழ்மொழிக்கோ இவ்வித உதவி புரிவார் ஒருவரும் இல்லை. சாசனப்பதிப்பு இலாகாவிலே தமிழ் நன்கு அறிந்தவர்கள் குறைந்துகொண்டு வருகிறார்கள். நம் தமிழ்ப்புலவர்களுக்கோ சாசனம் இன்ன தென்றே தெரியாது. எட்டுப்பிரதிகளில் உள்ள செய்யுள் களும் புலவர்களுமே யன்றி வேறு எதுவும் அறியார்கள். திரு வண்ணாமலைக் கோபுரத்திலும், சிதம்பரச்சுவரிலும், திருச்சி மலைக் குகையிலும் அழகான செய்யுள்கள் செதுக்கப்பெற்றிருக்கின்றன என்றால் அவர்கள் பிரமைகொண்டு நம்பவே மாட்டார்கள். ஆக வே நம் தமிழ்க் கவிசரிதத்தைச் செவ்வையாகவும் உண்மையாக வும் அறியவேண்டுமென்றால் நம் மாணவர்கள் அரசியலாரை எதிர் பார்க்காது ஆலயங்களில் உள்ள கல்வெட்டுக்களைத் தாமே படித்து எழுதவேண்டும். இதற்குப் பேர் உதவி புரியக்கூடியவர்கள் அவ் வவ்வாலயத்து அதிகாரிகளே யாவார்கள். மேல்நாடுகளில் ஒவ் வொரு பண்டைச் சின்னத்திற்கும் ஒவ்வொரு சரித நூல் இருக்கி றது. நம் நாட்டிலும் ஒவ்வோர் ஆலயத்திற்கும் உண்மைச் சரித நூல் வேண்டாமா? தலமான்மியங்களைக் கட்டிவைக்கும் காலம் வந்துவிட்டது. உண்மைச்சரிதம் புறப்படும் காலம் தோன்றி வருகிறது. இதனை வீண்போக்காமல் பயன்படுத்துவது நம் கடமை. மாணவர்கள் உதவி பெறாமல் அலையும் இக்காலத்தில் ஆலய நிர்வாகி கள் ஒவ்வொரு மாணவரை நியமித்துத் தம் ஆலயத்துச் சரிதத்தை ஆராய்ச்சி செய்து வெளிப்படுத்துவது நல் நோக்கமாகும். நம் பண்டிதப் பெருமக்களும் இந்நூதன முறைகளில் ஈடுபட்டு நாட்டு அன்பிற்கும் கைங்கரியத்திற்கும் தம் பொருள் வருவாய்க்கும் வழி தேடிக்கொள்ளுவார்களாக!

## பலகலைகளையும் ஆராய்தல்

சமயமும் இலக்கணமும் இலக்கியமுமே ஒரு மொழிக்கு ஏற்ற உறுப்புக்கள் என்ற கொள்கை மாறவேண்டும். இம்மூன் றைத்தவிர தமிழர்கள் வேறு எந்தக் கலையைப் போற்றினார்கள்? விஞ்ஞான சாத்திரங்கள், தொழில் நூல்கள், முதலான பல துறைகளில் என் நூல்கள் பிறக்கவில்லை? இவை இல்லாதவழி

ஒரு மொழியும் சீரும் சிறப்பும் எற்காது; பூதகத்வம், பூதநூல், உடல்நூல், ரசாயனம், ககோளம், வைத்தியம், கணிதம், உயிர் நூல் முதலிய பல இயற்கை நூல்களும், தர்க்கம், நியாயம், சட்டம் முதலான தத்துவங்களும் தமிழருக்கு இன்றியமையாத நூல்களாகும். இவைகளுக்குத் தக்கபடி மொழியை விரித்துக்கொள்ளல் அவசியம். நம் மாணவர்கள் இவ்விதப் புது நூல்கள் இயற்றுவதில் ஈடுபடல்வேண்டும். இவ்வாறு தமிழைப் பெருக்கிவரின் அம்மாது யாதொரு குறைவும் இன்றி, சிறந்த அணிகலன்கள் அணிந்து, 32 இலக்கணங்களும் வாய்ந்த யுவதியாக விளங்குவாள். அப்போதுதான் வரந்தருவார் அருளிய "தமிழ்மாது வளருகின்றாள்" என்ற வாக்கு உண்மையாகும்.

## உடற்பயிற்சி

நம் தமிழ் மாணவர்கள் தம் மூளைகளைப் பெருக்கி அறிவை விசாலப்படுத்திக் கொண்டிருந்தால் போதுமா? அவர்கள் உடம்புகளை யார் பார்த்துக் கொள்வது? உணவு பெறுவதன் சார்பாக இருக்கும் சூக்குமம் ஒன்றுண்டு. அதனை நம் பெரியார்கள் ஏற்றுக்கொள்ளல் வேண்டும். ஆனால் உணவுமட்டும் இருந்தால் போதுமா? உடலை நோயற்ற நிலையில் வைத்திருக்க முயல வேண்டாமா? ஒரு கோலுக்கு அங்கியும் தலைக்குட்டையும் அணிந்தால் அது தமிழ்ப்பண்டிதன் ஆகும் என்ற நினைவு அடியோடு மறையவேண்டும். ஆதிகாலத்தில் முன்வைத்த காலைப் பின் வாங்காது மார்பில் வேல் தாங்கி உயிர் துறந்த வீரர்களைப்போல நம் மாணவர்கள் இருக்கவேண்டும்.

## சிக்கனம்

நமது மாணவர்கள் சிக்கனம் என்பதை அறிவதே இல்லை. எத்தனை சிறுவர்கள் நாட்டுப்புறத்திலுள்ள தம் பெற்றோரைவிட்டு நகரங்கள் சேரும்போது அருமையாகத் தம் பெற்றோர் சேமித்து வைத்த பொருள்களை ஒரு கணத்தில் உதறி விடுகிறார்கள்! இதனால் பெற்றோர்களும் தாமும் மீள முடியாத் துன்பத்தில் பிற்காலத்தில் ஆழ்ந்துவிடுகிறார்கள். கலாசாலையில் படிக்கும் மாணவர்கள் தம் அருமைக்காலத்தை வீணாக்காமல் பயன்படத் தக்கவழிகளிலும் துறைகளிலும் கவனம் செலுத்துதலும் சிக்கனமாகும்.

தம் அறிவை அதனால் விசாலப்படுத்திக்கொள்வதோடு அவர்கள் பொதுஜன ஊழியமும் செய்யமுடியும். பிறருடைய துயரங்களைப் போக்குதலில் எப்போதும் கண்ணும் கருத்துமாக இருத்தல் வேண்டும். ஏழை மக்களுடைய கண்களில் நீர் வரவொட்டாமல் தடுப்பதில் உள்ள நன்மையைக்காட்டிலும் வேறு புண்ணியம் எது வுண்டு? அதற்கு அவசியமான சில தொழில்களைக் கற்றுக்கொள்ளல் வேண்டும். இலகுவான வைத்தியம், சுலபமான மருந்துப் பிரயோகம், சுகாதார ஏற்பாடுகள், சிக்கன முறைகள் இவைகளை நன்றாகத் தெரிந்துகொண்டு ஏழைமக்களிடை ஒழிவு நேரங்களில் சென்று நல்லுதவி புரியவேண்டும். இத்தொழில்களை மாணவர்களே ஏற்கத் தகுதி உடையவர்கள். கடற்கரைகளிலும், ஆற்றோரங்களிலும், சிட்டாட்டங்களிலும், சங்கீத நடனக் கச்சேரிகளிலும் பொழுதுபோக்கு மண்டபங்களிலும் வீண் காலம் கழிப்பதைக் காட்டிலும் பொது ஜன சேவையிலும், வாசக சாலையிலும், சொற்பொழிவுகளிலும் ஒழிவு நேரத்தைப் பயன்படுத்துவது மிக நல்லது ஒரு கூட்டத்தில் பேசச்சொன்னால் எனக்குத் தமிழில் பேசவராது என்ற நாணம் கெட்ட வார்த்தை தமிழ் மக்களிடம் தான் வருகிறது. வட இந்தியாவில் ஆங்கிலத்தில் எத்துணைப் பாண்டித்தியம் பெற்றிருந்தாலும் அவன் எழுதுவதும் பேசுவதும் தன் தாய் மொழியில்தான் என்று நம் தமிழர் அறிய வேண்டும்.

---

# பதிற்றுப் பத்து விளக்கம்

(பண்டிதர் A. நடராஜபிள்ளையவர்கள்)

(இதன் உரிமை ஆக்கியோற்குரியது)

## க. சங்கம்

தமிழானது நீண்ட காலமாகத் தண்டமிழ்ப் புலவர்கள் பலராலும், தமிழ் நாடாண்ட தண்ணளி வேந்தர் சிலராலும் சீர்திருத்தப் பெற்று வந்த சிறந்த வொரு மொழியாகும். இதனை, ஐயாயிரமாண்டுகட்கு முன்னரே யிருந்த நமது அருந்தமிழ் மக்கள் பலர் சங்கம் ஏற்படுத்தித் தனிச் சிறப்புற வளர்த்தனர். இச்சங்கம், பல கடல் கோள்களால் இடை யிட்டு நடக்க நேர்ந்தமையினாலே,

முச் சங்கங்களாகப் பிரியலாயிற்று. முச் சங்கங்கள் முதற் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் எனப் பெயர் கொண்டன. அவற்றுள், முதற் சங்கம் கி. மு. 3780 ஆண்டுகட்கு முன் தொடங்கப் பட்டிருக்கலாமென மறைமலையடிகள் (சுவாமி வேதாசலமவர்கள்) தமது மாணிக்க வாசகர் கால ஆராய்ச்சி என்ற நூலில் முடிவு கட்டியுள்ளார்கள். அஃது எங்ஙன மெனின், முதற் சங்கப் புலவர்களி லொருவரெனப் பழந்தமிழ் நூல்களால் துணியப் பட்ட முரஞ்சியூர் முடிநாகராயர் என்பவர் அக்காலத்தில் அரசு வீற்றிருந்த சேர நாட்டுத் திருவுடை மன்னனான உதியஞ் சேரலாதனை,

"அலங்குளைப் புரவி ஐவரோடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ் சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்!"

எனப் புகழ்ந்துள்ளனர். இதனால், பாரதப் போரிற் பாண்டவர்களுடைய படைகளுக்கு உணவுப் பொருள்கள் கொடுத்துதவிய உதியஞ் சேரலாதன் முதற்சங்க காலத்தில் இருந்தன னென்பதும், பாரதப்போர் நிகழ்ந்த காலமும் முதற் சங்கம் இருந்த காலமும் ஒன்றாகு மென்பதும் பெறப்படுகின்றன. பாரதப் போர் நடந்து சற்றேறக் குறைய ஐயாயிரமாண்டுகள் ஆகுமென்று வைத்தியா என்ற பெரியார் தாம் ஆங்கிலத்தில் வரைந்துள்ள, 'மகாபாரத ஆராய்ச்சி' என்னும் நூலில் உயர்ந்த பல உண்மைச் சான்றுகள் காட்டி விளக்கி யுள்ளார். ஆகவே, இவற்றை யெல்லாம் கூட்டிக் கூர்ந்து நோக்குவார்க்கு மேற் கூறிய காலவளவு தெள்ளிதிற் புலனா மென்பதாம்.

இம் முதற் சங்கம், கன்னியாகுமரி முனைக்குத் தெற்கே இப்பொழுது காணப்படும் பெரிய கடற் பரப்பில் அக்காலத்திற் சிறப்புடன் விளங்கிய குமரி நாட்டின் தலைநகராகிய தென்மதுரையிற் சிறப்புற்றோங்கியதெனச் சிலப்பதிகாரமாகிய அருந்தமிழ் நூலுக்கு உரைவகுத்த அடியார்க்கு நல்லார் கூறுகின்றனர். முதற் சங்கம் 4440 ஆண்டுகள் 89 பாண்டியர்களால் நடத்தப் பட்டதென்று அவர் சொல்லுகின்றனர். இங்குக் காட்டிய ஆண்டுக் கணக்கு, ஒன்றை ஆயிரமாகப் பெருக்கிக் கூறுவதுபோற் காணப்

படுகின்றது. உலகிலே பல பாகங்களிலும் அரசாண்ட அரசர்களின் தொகையையும், அவர்கள் அரசுபுரிந்த ஆண்டுகளையும் வெவ்வேருகக் கூட்டிப் பின், ஆண்டின் தொகையை அரசாது தொகையால் வகுத்துப் பார்க்க, ஒவ்வோர் அரசர்க்கும் இருபது ஆண்டுகள் ஏற்படுகின்றன என்பது வரலாற்று நூலாசிரியர்கள் பலர் கூடி ஆய்ந்து முடிவுகண்ட வொன்ருகும். ஆகலின், ஒவ்வொரு பாண்டியனின் ஆட்சிக் காலத்தையும் 20 ஆண்டுகளாகக் கொண்டு, 89 பாண்டியர்களால் நடத்தப்பட்ட முதற்சங்கம், 1780 ஆண்டுகள் நடை பெற்றதாகக் கொள்ளலாம். இதன் முடிவில், ஒருபெரிய கடல்கோள் ஏற்பட்டது. இக்கடல்கோளே, தமிழர்களுடைய தமிழ்மொழிச் சிறப்பையும், நாகரீகத்தையும் தலை கிழாக்கியது.

அக் கடல்கோட்குத் தப்பிய தமிழர்கள் வடக்கு நோக்கிச் சென்று, இடைச்சங்கத்தை ஏற்படுத்தினர்கள். இடைச் சங்கமிருந்த நகரின் பெயர் கபாடபுரமாகும். இது வடமொழி நூலாகிய வான்மீகி இராமாயணத்திற் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. இதனைச் செந்தூர் என்ற திருச்சீரலைவாய்க்குப் பக்கத்தி லுள்ள கடற்பாகத்தில் இருந்த அலைவாய் நகரமென மறைமலையடிகள் தமது மாணிக்கவாசகர் கால ஆராய்ச்சியில் கண்டுள்ளார்கள். கடலை நோக்கிய சிறந்த வாயிலையுடைய நகரம் என்பது வடமொழியாளரால் கபாடபுரம் என மொழிபெயர்க்கப்பட்டதெனல் கருத்தாம். இவ்விடைச்சங்கம் 59 பாண்டியர்களால் நடக்கலாயிற்றென நவிலப்படுதலால், முன்னர்க் கூறிய கணக்குப் படி இது நடைபெற்ற காலம் 1180 ஆண்டுகளாகும். இதுவும் மற்ருெரு கடல்கோளால் மறைந்தது.

பின்பு, கடைச்சங்கம் மதுரையில் ஏற்படுத்தப்பட்டது. இதனை 49 பாண்டியர்கள் தலைவராயிருந்து நடத்தினர்கள் என வரலாற்றிற் காண்கின்ருேம். முன்கணக்குப்படி இது நடைபெற்ற காலம் 980 ஆண்டுகளாம். ஆகவே, முச்சங்கங்களும் நடைபெற்ற மொத்தகாலம் 3940 ஆண்டுகளாம். ஆகவே, கி. மு. 3740 ஆண்டுகட்குமுன் தொடங்கிய தமிழ்ச்சங்கம் கி. பி. 200 ஆண்டுகள் வரை நடைபெற்றதெனக் கொள்ளல் வேண்டும். கடைச்சங்கம் கி. பி. 200 ஆண்டுகள் வரை நடைபெற்ற தென்பதைத்

துணிவதற்குச் சான்றுகள் வேண்டுமல்லவா? சிலப்பதிகார காலத்தில் இருந்தவனான இலங்கைக் கயவாகுமன்னன் காலம் கி. பி. 180-வது ஆண்டென்பது பல அறிஞர்களின் கொள்கை. அக் காலத்திற் கண்ணகியின் சீற்றத்தால், ஆரியப்படை தந்த நெடுஞ் செழியன் என்னும் பாண்டியன் அழிந்தான். அவனுக்குப் பின், வெற்றிவேற் செழியன் பட்டத்திற் புகுந்தான். இவன் காலத்தில் பாண்டிநாடு கண்ணகிக்குத் தீம்புசெய்த காரணங்கொண்டு, மிகுந்த குழப்பத்தில் மூழ்கிக் கிடந்தது; மழையின்றி வற்கடம் பரவப் பெற்றது. நோயாற் பலர் மடிந்தனர். பொற்கொல்லர் பலர் பலி கொடுக்கப் பட்டனர். இவற்றால், வெற்றிவேற் செழியன், கொற்றங் காணாது விரைவில் ஒழிந்தான். பின், உக்கிரப்பெரு வழுதி என்ற பாண்டியன் பட்டத்திற்கு வந்தான். இவ்வழுதி யோடு கடைச்சங்கம் ஒழிந்ததெனச் சிலப்பதிகாரவுரை செப்பு கின்றது. முன்னர்க் கூறிய கணக்குப்படி வெற்றிவேற்செழிய னுக்கும், உக்கிரப்பெருவழுதிக்கும் 40 ஆண்டுகள் கொடுத்து, ஆரியப்படை தந்த நெடுஞ்செழியன் காலத்தவனான இலங்கைக் கயவாகுமன்னன் காலமாகிய கி. பி. 180 உடன் கூட்டினால், கடைச் சங்கம் இல்லையாய்ப்போன காலம் கி. பி. 220 ஆம் ஆண்டாகும். எனவே, சற்றேறக்குறைய கி. பி. 200 ஆண்டுகள்வரை கடைச் சங்கம் நடைபெற்றதெனக் கொள்ளல் பொருந்துவதாகும். இனி, சங்ககாலத்தில் தோன்றிய நூல்களை நோக்குவோம்.

## 2. சங்க நூல்கள்

சங்க நூல்கள் என்பன, அக்காலப் புலவர்கள் பலரால் அவ் வப்போது பாடப்பட்ட அருமையான பாடல்களைச் சங்கப் புலவர் களும், தலைவர்களும் ஒன்றுகூடி ஆராய்ந்து, அவற்றிலுள்ள பொருள்களின் தன்மைக்கேற்ப, அவற்றைப் பகுத்துத் தொகுத்து வைத்த தொகுப்புக்களேயாம். முதற் சங்கத்தில், பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களரியாவிரை என்ற நூல்கள் இருந்தன; இடைச் சங்கத்தில் கலி, குருகு, வெண்டாளி, வியாழமாலை, இசைநுணுக்கம், மாபுராணம், பூதபுராணம், அகத்தியம், தொல் காப்பியம் என்ற நூல்கள் இருந்தன. கடைச்சங்கத்தில் முத் தொள்ளாயிரம், நற்றிணை, நெடுந்தொகை, அகநானூறு, புற நானூறு, குறுந்தொகை, சிற்றிசை, பேரிசை, வரிப்பாடல்கள்,

பதிற்றுப்பத்து, எழுபது பரிபாடல்கள், நூற்றைம்பது குறுங்கலி, அகத்தியம், தொல்காப்பியம் என்ற நூல்கள் இருந்தன. இவைகளெல்லாம் சிலப்பதிகார வுரையிற் கண்டனவாம்.

இப்பொழுது கடைச்சங்க நூல்களாக நமக்குக் கிடைத்துள்ளன பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு, தொல்காப்பியம் என்பனவாம். பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை, பொருநாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் எனப் பத்துப் பெரும்பாட்டுக்களாகிய பத்து நூல்கள் காணப் படுகின்றன. இவை சிலப்பதிகார உரையிற் சங்க நூல்களாகக் காட்டப்பட்டவற்றுள் காணப்படவில்லை. இவைகள் வேறு தொகுப்புப் பெயர்கொண்டு அவற்றுள் கலந்திருக்கின்றன போலும். எட்டுத்தொகை நூல்கள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பனவாகும். இவ்வெட்டு நூல்களுள் ஐங்குறுநூறும், கலித்தொகையும் சிலப்பதிகார வுரையிற் காட்டப்படவில்லை. கலித்தொகை இடைச்சங்க நூலாகிய கலி ஆகுமோவென்க் கருதக் கிடக்கின்றது.

பதினெண் கணக்கு நூல்கள் நாலடியார், நான் மணிக்கடிகை இனியவை நாற்பது, இன்னா நாற்பது, கார் நாற்பது, களவழி நாற்பது, ஐந்திணை ஐம்பது, திணைமொழி ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமாலை நூற்றைம்பது, திருக்குறள், திரிகடுகம், ஆசாரக் கோவை, பழமொழி, சிறுபஞ்ச மூலம், இன்னிலை, முதுமொழிக்காஞ்சி, ஏலாதி எனப் பெயர்பெறும். இவை, முற்கண்ட சங்க நூல்களிற் காணப்பட வில்லை. இவைகளும், பத்துப்பாட்டு எட்டுத் தொகை பதினெண் கீழ்க்கணக்கு என்ற தொகுப்பு முறைகளும் கி. பி. 470 ஆம் ஆண்டில் வஜ்ர நந்தி என்ற சமணப் பெரியா ரொருவரால் மதுரையிற் கூட்டப் பட்ட தமிழ்ச் சங்கப் புலவர்களால் ஏற்பட்டன போலும். தொல்காப்பியம் சங்க நூல்களாகிய கடலுக்குக் கலங்கரைவிளக்கம் போல் விளங்குகின்றது. மற்றைய முத்தொள்ளாயிரம், நெடுந்தொகை சிற்றிசை, பேரிசை, பல வரிப்பாடல்கள், நூற்றைம்பது குறுங்கலி,

அகத்தியம் என்ற நூல்கள் இறந்து பட்டன போலும்! ஐம்பெருங்காப்பியங்களுள் சிலப்பதிகாரம் மணிமேகலை என்ற இரண்டு நூல்களும் கடைச்சங்க காலத்துள்ள பெரும் புலவர்களாற் செய்யப்பட்டு, சங்க நூல்களைச் சார்ந்து நிற்பனவாகும்; சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி என்ற மூன்று நூல்களும் சூளாமணி முதலிய சிறுகாப்பியங்கள் ஐந்தும் சமணர்கள் தமிழைக் காப்பாற்றிவந்த காலத்திற் கண்டனவாகும்.

## ௩. சேரவரசர்கள்

தமிழ்நாட்டு மூவேந்தர்களுள், சேரவரசர்கள் முதன்மையானவர்கள் என்பதைச் சேரசோழ பாண்டியர் என்ற பழைய வழக்கினாலும், சேரர் மரபு மிகவும் பழங்காலந்தொட்டு வருவதென்பதை, சோழர்களுக்குச் சூரியனும் பாண்டியர்களுக்குச் சந்திரனும் வம்ச முதல்வர்களாக ஏற்பட்டதுபோல் சேரர்களுக்கு வம்ச முதல்வ னின்மையாலும் காணலாம். இவர்கள் பாண்டியர்களைப்போல், முச்சங்கங்களால், தமிழைப் போற்றாவிடினும், தமிழினும் தமிழ்ப்புலவர்களிடத்திலும் மிகுந்த பற்று வைத்திருந்தார்களென்பதைச் சங்க நூல்களால் நன்கு தெளியலாம்.

இவர்களால், ஆளப்பட்ட சேரநாடு சேலம், கோயம்புத்தூர், நீலகிரி, தென் மலையாளம், வட மலையாளம் என்ற ஜில்லாக்களையும் கொச்சி, திருவாங்கூர் ஆகிய சமஸ்தானங்களையும் கொண்டுள்ள நிலப்பரப்பாகும். அக்காலத்தில், இது கொங்குநாடு, குடநாடு, குட்டநாடு, பூழிநாடு, மலாடு, உம்பற்காடு எனப் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, சேர மரபினர்களால் ஆண்டுவரப்பட்டதாகத் தெரிகின்றது. சேரர்கள் சேரமான் இரும்பொறை, அதியமான், மலையமான் எனச் சங்கநூல்களிற் பிரித்து வழங்கப்படுகிறார்கள். இவர்களுள் சேரமான் எனப்படுபவர்கள் தலைமை யரசர்களாகவும் செல்வாக்குடையவர்களாகவும் காணப்படுகிறார்கள்.

## ௪. பதிற்றுப்பத்து

பத்து + பத்து = பதிற்றுப்பத்து. இது பண்புத்தொகை நிலைத்தொடராகலின், 'இற்று', என்ற சாரியை இடையில்பெற்று முடிந்தது. பத்துப் பாட்டுக்களாகிய பத்துத்தொகுதிகளையுடைய

நூலென்பது பொருளாம். பதிற்றுப்பத்து கடைச்சங்கநூல் களின் வரிசையிலும், எட்டுத்தொகை நூல்களில் நான்காவதிலும் காணப்படுகின்றது இதிலுள்ள ஒவ்வொரு பத்துப்பாட்டுக் களும் ஒரு சேரவரசனுடைய கொடையினையும், வீரத்தையும், வரலாற்றையும் விரித்துக் கூறுகின்றன. இவற்றுள் முதற்பத்தும் எட்டாம்பத்தும் ஏட்டுச்சுவடியிலேயே இறந்துபட்டன. மிகுந் துள்ள எட்டுப்பத்துக்களும் எட்டுச் சேரவரசர்களைப்பற்றிக் கூறுவனவாம். இரண்டாம்பத்து முதல் ஆறும்பத்து முடிவுள்ள ஐம்பது பாடல்கள் சேரமான் மரபினர்களாகிய ஐந்து சேரவரசர் களைப் புகழ்கின்றன. ஏழாம் பத்துமுதல் ஒன்பதாம்பத்து முடிய வுள்ள முப்பது பாடல்கள் இரும்பொறை மரபினர்களாகிய மூன்று சேரவரசர்களைப் புகழ்கின்றன.

இரண்டாம்பத்து : குமட்டூர்க் கண்ணனர் என்ற புலவரால் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்ற சேரவரசனைப்பற்றிப் பாடப்பட்டதாகும். இவனுடைய தந்தை உதியஞ் சேரலாத னவன். இவன் தாய் வெளியன் என்ற சிற்றரசனெருவனுடைய மகளாகிய வேண்மாள் நல்லினி எனப்படுவாள். நெடுஞ்சேரலா தனுக்குப் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் என்று ஒரு தம்பியு முண்டு. இவனுக்கு மனைவியர் இருவர். ஒருத்தி சோழவரசனுகிய மணக்கிள்ளி என்பானுடைய மகள் நற்சோணையாவள். இவள் வயிற்றிற்பிறந்த மக்கள் இருவர். அவர்கள் செங்குட்டுவன், இளங் கோவடிகள் எனப் பெயர்பெறுவர். மற்றொருத்தி வேளாவிக் கோமான் என்னும் சிற்றரசனுடைய மகளாகிய பதுமன் தேவியா வள். இவள் வயிற்றிற்பிறந்த மக்களு மிருவரே. அவர்கள் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், ஆடுகோட்பாட்டுச் சேரலா தன் எனப்படுவர். களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் தன்னு டைய மாற்றாந்தாய் மகனுகிய செங்குட்டுவனுக்கு வயதில் முதிர்ந் தவனுவன்.

மூன்றும்பத்து : பாலைக் கௌதமனர் என்ற புலவரால் பல் யானைச்செல்கெழு குட்டுவன் என்ற சேரவரசனைப்பற்றிப் பாடப் பட்டதாகும். இவன் இரண்டாம் பத்தால் பாடப்பட்ட இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனுக்குத் தம்பியாகலான் இவனைப் பற்றிய பாடல்கள் இரண்டாம் பத்தினையடுத்து மூன்றும் பத்தாக

வைக்கப்பட்டன. நான்காம்பத்து: காப்பியாற்றுக் காப்பியனார் என்ற புலவராற் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் என்ற சேரவரசனைப்பற்றிப் பாடப்பட்டதாகும். இவன், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுக்கு முதலிற் றோன்றிய மகனாகையால், அவ்னுடைய சிற்றப்பனாகிய பல்யானைச்செல்கெழுகுட்டுவன் பாடல்களையடுத்து இவனுடைய பாடல்கள் வைக்கப்பட்டன; ஐந்தாம்பத்து: பரணர் என்ற புலவரால் செங்குட்டுவன் என்ற சேரமன்னனைப்பற்றிப் பாடப்பட்டதாகும். இவன் நான்காம் பத்தாற் பாடப்பட்ட களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரனுக்கு வயதி லிளையவனாகலின், இவனைப்பற்றிய பாடல்கள் அவனுடைய பாடல்களுக்குப் பின்வைக்கப்பட்டன. ஆறும் பத்து: காக்கைபாடினி நச்செள்ளையார் என்ற பெண் புலவரால் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப்பற்றிப் பாடப்பட்டதாகும். இவன் செங்குட்டுவனுக்கு வயதிலிளமை கருதி, செங்குட்டுவன் பாடல்களுக்குப்பின் இவனுடைய பாடல்கள் சேர்க்கப்பட்டன.

ஏழாம்பத்து: கபிலர் என்ற புலவரால் செல்வக்கடுங்கோ வாழியாதன் என்ற சேரவரசனைப்பற்றிப் பாடப்பட்டதாகும். இவன் இரும்பொறை மரபினன். இவனுடைய தந்தை அந்துவஞ் சேரலிரும்பொறை எனப் பெயர் பெறுவான். இவன் தாய் பெயர் பொறையன்பெருந்தேவியாம். இவனுடைய மனைவி வேளாவிக் கோமான் என்று முற்கூறப்பட்ட சிற்றரசனுடைய மற்றொருமகளாகிய பதுமன் தேவியாவள். ஆகவே, செல்வக்கடுங்கோவாழியாதன், இரண்டாம்பத்தாற் பாடப்பட்ட இமயவரம்பன்நெடுஞ் சேரலாதனுக்குச் சகல முறையினன் என்பதும், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுடைய காலத்தில், சேரநாட்டி னொருபகுதியை யாண்ட சேரவரசன் என்பதும் பெறப்படும். இவனுக்குத் தகடூ ரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை என்ற வொரு மகனுண்டு. எட்டாம்பத்து: அரிசில்கிழார் என்ற புலவரால் மேற்கூறிய தகடூ ரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை என்ற சேரவரசனைப்பற்றிப் பாடப்பட்டதாகும். இவனுடைய மனைவி மையூர்கிழான் மகளாகிய வேண்மாள் அந்துவஞ்செள்ளை எனப் பெயர் பெறுவாள். இவனுக்கு இளஞ்சேரல் இரும்பொறை என வொரு மகனுண்டு ஒன்பதாம் பத்து: பெருங்குன்றூர் கிழார் என்ற புலவரால் மேற்

கண்ட இளஞ்சேரல் இரும்பொறை என்ற சேரவரசனைப்பற்றிப் பாடப்பட்டதாகும். எழாம் பத்து முதல் ஒன்பதாம்பத்து முடிய வுள்ள மூன்று பத்துக்களும் தகப்பன் மகன் பேரன் என்ற முறைப்படி சேர்க்கப்பட்டுள்ளன.

இளஞ்சேரல் இரும்பொறைக்குப்பின் பட்டத்துக்கு வந்த வன் யானைக்கட்சேய்மாந்தரஞ் சேரல் இரும்பொறையாவன். இவன் எழாம்பத்துப் பாடிய கபிலர் என்ற புலவர் பெருமானுக் குப் பின்னிருந்தவனெனப் புறநானூற்றுப் பாட்டால் (53) அறியக் கிடப்பதாலும், செல்வக்கடுங்கோவாழியாதன் முதலிய மூன்று இரும்பொறை மரபினர் தொடர்ந்து காணப்படுவதாலும் யானைக் கட் சேய்மாந்தரஞ் சேரலிரும்பொறை இளஞ்சேரலிரும்பொறைக் குப் பின் பட்டத்துக்கு வந்தவ னெனத் துணியப்பட்டது. ஆயி னும், இவனுக்கும் ஒன்பதாம் பத்தால் பாடப்பட்ட இளஞ்சேர லிரும்பொறைக்கும் என்ன உறவு என்பதைக் கண்டுபிடிக்கச் சான்றுகள் கிட்டவில்லை. இவன், சங்கநூல்களிற் கொண்டா டப்படும் தன்மை கொண்டும் இளஞ்சேரலிரும் பொறைக்குப் பின் பட்டத்துக்கு வந்த பான்மை கொண்டும் பத்தாம்பத்தாற் பாடப்பட்டவனாயிருத்தல் கூடுமோ வெனவோர் ஐயமுண்டாகின் றது. இனி, முதற்பத்தாற் பாடப்பட்டவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனுடைய தந்தை உதியஞ்சேரலாவனோ என்று சேரவரசர்களின் பப்பத்துப் பாடல்களைத் தொகுத்த முறை கொண்டு கருதவிடமுண்டாகின்றது. (தொடரும்.)

---

ஔவையார்

# திருவெண்பாப் பொருள் விளக்கம்

(முன் ௩௬௨-ம் பக்கத் தொடர்ச்சி)

இங்ஙனம் கூறியவிதனாற் கன்மவேள்வி, தவவேள்வி, ஜப வேள்வி, தியானவேள்வி, ஞானவேள்வியெனத் திவ்யாகமங் கள் கூறும் ஐவகை வேள்விகளுள், முன்னைய இரண்டும் சித்தாந்த சைவர்க்கே யன்றி ஏனைப் புறச்சமயத்தார்க்கு முரியனவாய்ப் பொதுவில் நிற்பதொன்றாகலானும் அவற்றாலெய்தும் பயனும்

"பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கும் இசைத்த இரு வினையிலின்பம்" என்றபடி அனித்தியமா யொழிதலன்றி பின்னவைபோல முத்திக்கு நேர்வாயிலாகாமையானும் அவ்விரண்டையும் வேறுவைத்து, மேற் சித்தாந்தசைவர்க்கேயுரிய விசிஷ்ட வேள்விகளாய் முத்தி சாதனங்களாய் நிற்கும் ஜபம், தியானம், ஞானம் என்னும் மூவகை வேள்விகளையே விதந்தெடுத்துக் கொண்டு, என்னல், சிந்தித்தல், இருத்தல் என்னும் இம்மூவகைச் சொற்களால் இங்ஙனம் நிறுத்தியருளினர் அவ்வையார்; என்க.

என்னை? கன்மவேள்வி தவவேள்விகள் சித்தாந்த சைவ ரல்லாதார்க்கும் பொதுவகையாய்ச் சேறல்பற்றி வேறுவைத் தெண்ணியவெனின், ஜபவேள்வியு மவ்வாறே சைவரை யொழித் தொழிந்த சமயிகட்கும் பொதுவகையாற் சேறலுண்மையின் இத்தனையு மவ்வாறே வேறுவைத்தெண்ணுதல்கூடும்; அற்றன்றிச் சித்தாந்த சைவர்க்கே யுரித்தாமென்றல் கூடாதாவெனின், அங்ஙனம் வரும் ஆசங்கை யொழித்து அஃதன்னோர்க்கே யுரித்தமாறு காட்டுதற்கன்றே மந்திரங் கணித்து எனப் பொதுவகையாற் கூறாது ஸ்ரீ பஞ்சாக்கரத்தையே கிளர்ந்தெடுத்தோதி யருளினர் அவ்வையாரென்றவாறு. ஸ்ரீ பஞ்சாக்கரம் கணிப்பார் சைவரே யன்றிப் பிறரன்மையான். அற்றேல், ஸ்ரீ பஞ்சாக்கரஜபம் முதலியன ஆகமங்களினன்றி வேதத்துள்ளுங் கூறப்படுதலானும், வேதத்தின்வழி வேறுவேறு முடிபுகள் கொண்டொழுகும் வைதிகசமயத்தார் பலரும் அதனைக் கணித்த லுண்மையானும், அஃது சித்தாந்தசைவர்க்கே யுரியதென்றல் பொருந்துமா றெங்ஙனெனின், அறியாது கடாயினாய்! அவ்வாசங்கை யொழித்தற் கன்றே பஞ்சாக்கரமெனப் பொதுப்படக் கூறாது முத்திபஞ்சாக் கரத்தையே ஈண்டு ஔவையார் விதந்தெடுத் தோதுவாராயிற் றென்பது.

என்னை? ஏகான்மவாத வேதாந்திகள், சிவாத்துவித சைவர், முதலினோர் ஸ்ரீ பஞ்சாக்கரங் கணித்தலுண்டெனினும், அவ்வைதிகர் பாசஞான பசுஞானிகளாய் ஆணவமலத்துண்மை கொள்ள மாட்டாத அகப்புறச்சமயத்தாரா யிருத்தலின், அன்னோர் கொள்வது முத்திபஞ்சாக்கரமாகாமையானும், சமய விசேட நிர்வாண மென்னும் சம்ஸ்காரங்கள் ஆகமவழிப்பெறாத அன்னோர்க்கு முத்தி பஞ்சாக்கரத்துண்மை யுணர்த்துவாரொருவரு மின்மையானும்,

ஓர்போது வலிந்து மேற்கொள்ளினும் (கதிரோனெதிர்ப்பட்ட கூகையின் கண்ணுக்குப் பொருள் காட்சியாகாது அந்தகாரஞ் சூழ்வதுபோல) அத்துவசுத்தி யில்லாத வன்னோர்க்கு அதன் பொருள் விளங்கிப் பயன்றருமா றின்மையானும், "பாச மூன்றையுந் தவிர்ப்பதும் மேலானதுமாகிய தீக்கையைத்தவிர இவ்வுலகத்தில் முத்திக்கு வழியில்லை; தீக்கையாலேதான் மோக்கம், ஆச்சிரமங்களாலும் பிறகருமங்களாலும் முத்தியில்லை. அத்துவசுத்தியின்றி முத்தியைப் பெற விரும்புகிறவன் கோலின்றிநடக்கத் தொடங்கிய குருடன்போல்வன்; தோணியின்றிக் கடல் கடக்க நினைத்தவனுவன்" என்று வாயுசங்கிதை சிவகீதை முதலிய உண்மை நூல்களில் அகத்தியர் உபமன்னியர் முதலிய உயர்ந்தோராற் றுணிந்து கூறப்பட்டமையின், ஈண்டுக் கூறியது பொது நீக்கிச் சித்தாந்த சைவர்க்கே சிறப்புவகையா னுரித்தாகிய முத்தி பஞ்சாக்கரமென்பது தெற்றென உணர்க. அஃது அன்னவாதல் அகத்தியர் வாத்தா னவதரித்து இருமொழிக்கடலும் ஒருங்கு பருகித் திராவிட மாபாடியம் வகுத்த சிவஞானயோகிகள் சிவஞான போதச் சிற்றுரைக்கண்,—"ஈண்டுப் பஞ்சாக்கரமென்பது முத்தி பஞ்சாக்கரத்தை. திருவைந்தெழுத்தாற் சாதிக்கப்படும் பொருளு மதுவேயாகலான் வேறு கூறவேண்டாமையின் விதிப்படி யென மாட்டெறிந்தொழிந்தார். இவ்வாசிரியர்மாட் டெறிந்தது முணரா தார் ஓதுமுறை வேறே சாதித்து நிற்குமுறை வேறேயெனச் சித்தாந்த வழக்கொடு முரணிக் கூறுவர்; ஓதுமுறையும் சாதித்து நிற்கு முறையும் தம்முளியைபில்வழி அஃததற்குச் சாதனமாமாறி யாண்டையதென்க" என்று விரித்துக் கூறினமையாலும் விளங்கும். இது நிற்க. மேற்

சரியை, கிரியை, யோகம், ஞானம் என நால்வகைப்படும் சிவ புண்ணியங்களுள், சரியையுங் கிரியையுமொன்ருக்கிச் சிவதன்ம மென்றும், யோகத்தைச் சிவயோகமென்றும், ஞானத்தைச் சிவஞானமென்றும் சித்தாந்த நூல்களிற் கூறப்படுவதுண்மையால், சிவதன்மம் ஸ்ரீ பஞ்சாக்கரங் கணித்தலினும், சிவயோகம் அதன் பொருளைச் சிந்தித்தலினும், சிவஞானம் சிந்தித்துத்தெளிந்த அப் பொருளைச் சாதித்துநிற்றலினும், அடங்கியிருத்தல்நோக்கி, என்று, சிந்தித்து, இருப்பார்க்கு, என்னுமிம் மூவகைச் சொற்களால் அந்நால்

வகைச் சிவ புண்ணியங்களையே இங்ஙனமெடுத்தோதினர் அவ்வை யாரெனப் பொருள் கூறுதலுமொன்று.

அறம் என்பது பற்பலவாமாக, "ஈதலறம்" எனத் தலைமையும் பயனு நோக்கி ஈதலொன்றன்மேல் வைத்துக் கூறியதுபோல், ஈண்டுச் சிவதன்மம் பலவாக, அவற்றுள் விசிஷ்டம் நோக்கி ஸ்ரீ பஞ்சாக்கர ஜபத்தின்மேல்வைத்துக் கூறினரென்பது—"விரும்புஞ் சரியை முதல் மெஞ்ஞானநான்கும் அரும்பு மலர் காய்கனிபோ லன்றோ பராபரமே." என மேலோர் கூறலின், இச்சிவபுண்ணிய நான்குமோரினமாய் ஒன்றற்கொன்று விசிட்டமாய் நின்று முற்றும் முத்திசாதனமாமாறு காட்டுவார் அங்ஙனம் முறைபடக் கூறியருளினர்; இம்மூவகைச் சிவபுண்ணியங்களும் முறையே நிகழ்ந்தன்றிச்சிவஞானம்விளங்கலும் வீடுபேறெய்தலும் கூடாமை யால். அற்றேல், அறுபத்துமும்மை நாயன்மாருள்ளிட்ட சிவ பத்தர் பலருக்குச் சரியைமுதலியனவின்றி ஞானம் நிகழ்ந்தவா றென்னெனின் அன்னோர் முன்னைத் தவப்பயன் கொண்டின்னிலத் துதித்த சாமுசித்தராதலின் அஃதிங்கு கடாவன்றென்க. விரிக்கிற் பெருகும். இதுநிற்க,

ஞானமொன்றுதானே கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிஷ்டைகூடலென நால்வகைப்படுமாதலின், அவற்றுட் கேட்டலை என்று என்னுமெச்சத்துட் குறிப்புப் பொருள்பட நிறுத்திவைத்து, தெளிந்தபின்னர் நிஷ்டைகூடுதற்கு இடையீடில்லாமையால் வேறு கூறவேண்டாது நிஷ்டையுளடக்கி, என்று, சிந்தித்து, இருப் பார்க்கு என்னுமுச்சொற்களால் அந்நால்வகை ஞானங்களையுமே இங்ஙனம் கூறியருளினர் அவ்வையாரெனப் பொருள் கொள்ளு தலுமொன்று. இது நிற்க. மேல்:

"அபாயமொருநாளுமில்லை" என்றார். இங்ஙனம் முத்திபஞ்-சாக்கரம் கணித்து, அதன் பொருள் சிந்தித்து, அவ்வழிச்சாதித்து நிற்கும் சித்தாந்தசைவராகிய மெஞ்ஞானிகள் அபாயத்தினின்று நீங்குவாரென்றபடியாம். ஈண்டபாயமாவது யாது? ஜநநமரணங் கட்குட்பட்டுச் சொர்க்க நரகாதிகளிற் சென்று திரிதலாகிய வபாயம்; அதுதான் ஏகதேசப்படுதலும் பரதந்திரமாதலுமாகிய வபாயம். விரித்துரைக்கிற் காலத்திரயத்திற்கட்டுண்டு, கன்மத்திர யத்திற் கலக்குண்டு, தேகத்திரயத்திற் சிக்குண்டு, அவஸ்தாத்திரயத் தில் அலைப்புண்டு, ஈஷணாத்திரயத்திலிழுப்புண்டு, தாபத்திரயத்திற்

ருக்குண்டு, புவனத்திரயத்திற்புக்குண்டு, சுழலு மபாயமாம். மல மாயா கன்மங்களின் காரியங்கள் எல்லாம் அபாயமேயென்பது தோன்ற "அபாயம்" என்று ஒரு சொல்லாற் கூறினர். இஃது பாசநீக்கங் கூறியவாறும். பாசநீக்கங் கூறவே சிவத்துவ விளக்கம் வேறு கூறவேண்டாதாயிற்று. என்னை? கரையாற் றடையுற்றிருந்த யாற்றுநீர் அத்தடை நீங்கியவழி முடுகியோடிக் கடல்நீர்புக்கு அந்நீரேயாய்ப் பின் னீங்காமுறை போல், உயிர் பாசமொருவியாண்டுத் தன்னிழலாய் நிற்கும் பதியோடீண்டற நிற்றலன்றி வேறிடமின்மையான்.—"ஊசல்கயிறற்றாற்றாய் தரையேயாந்துணையான்" எனவரும் மெய்கண்டார் திருவாக்கு மது. "அங்கியானது தானுமொன்றை யணைந்து நின்று விளங் கிடும் பங்கியாதுயிர் தானுமிப்படிப் பற்றியல்லது நின்றிடா" தென்றார் அருணந்தி சிவாசாரியார். "ஆணவத்தோ டத்துவிதமான படி மெஞ்ஞானத் தாணுவோடத்துவிதம் சாருநாளெந்நாளோ." என்றார் கருத்துமது. இவ்வத்துவிதநிலை யுணரமாட்டாதார் ஒன் றென்று மிரண்டென்று மன்றென்றுமாமென்றுந் தத்தமக்கு வேண்டியவாறே கூறியிடர்ப்படுப. "நன்றென்றுந் தீதென்று நானென்றுந் தானென்று, மன்றென்று மாமென்றுமாகாதே நின்றநிலை-தானதாந்தத்துவமாம்" என அவ்வையாருளிய வாய் மையைத் தெரிந்தோர்பாற் றெளிந்திடுக. ஈண்டு விரிக்கிற் பெருகும்

இனி அன்னோர் அவ்வபாயத்தில் "நீங்குவ" ரென்னாது "இல்லை" யென்றதென்னெனின், நீங்குதலொருதலை யென்பதும் அது விரைவின மென்பதும் காட்டுவார் "இல்லை" யென்னுஞ் சொல்லாற் கூறினர். அற்றேல், அவ்வபாயமில்லை யென்னுமவ் வளவே யமைவதாக "ஒருநாளுமில்லை" யென்ற தென்னையோ வெனின், அது, பசுபுண்ணியங்களெனப்படும் "தானம் யாகம் தீர்த்த மாச்சிரமம் தவங்கள் சாந்தி விரதம் கன்மயோகங்கள் சரித்தோர், ஈனமிலாச் சொர்க்கம் பெற்றிமைப் பளவின் மீள் வர்" என்றமையால் இச் செறிவந்த சிவஞானிகளும் அவ்வாறு மீளுதலுண்டோ என வரும் ஆசங்கை யொழித்து, அவரவ்வாறு நிலைதிரிந்து அவ்வபாயத்தில் யாண்டும் வீழ்வாரல்லரென்னு முறுதி காட்டுவார் "ஒருநாளு மில்லை" என விசேடித்தருளினர். "ஈசன்யோகக் கிரியாசரியையினி னின்றோர், ஊனமிலாமுத்தி

பதம்பெற் றுலகமெல்லா மொடுங்கும்போ" தெனவருஞ் சித்தியா ருமது. இவையே பதிபுண்ணியங்களென்பது. இனித் தான யாக தீர்த்தமாதிகள் சரியைகிரியாமார்க்கத்து முளவாக, அவை பசு புண்ணியமாமாறு யாண்டையதெனின், பசுபுண்ணியம் பதிபுண் ணியமென வேறுபட்டது, செய்வோரது கருத்து வகையா னன்றிப் பிறிதின்மையால் அஃதாசங்கையன்றென்க. இது நிற்க.

மேல் "உபாயமிதுவே" யென்றார், அவ்வபாயத்தினீங்கி வீடு கூடுதற்கு ஈண்டுக் கூறிப்போந்த சித்தாந்தசைவ நெறி யொன்றே நேர்வாயிலா மென்றவாறு. ஏகாரத் தேற்றத்தா லிஃதொழித் தொழிந்த நெறியெல்லா மதற்கு நேர்வாயிலாகா வென்பதூம் பெறப்பட்டது. இனி "உபாயம்" என்னும் சொல் எளிது எனவும் பொருள்படுத லுண்மையின், சத்திநிபாதத் துத்தமா யினர்க்கு இந்நெறி யெய்தி வீடு கூடுதல் எளிதின் முற்றுறு மெனக் கூறுதலு மொன்று.

மேல் "இதுவேமதியாகு" மென்றார். ஈண்டுநின்ற "மதி" யென்னுஞ் சொல் உண்மைஞானத்தின் மேற்று. அதுவே பரஞானமெனவும், பதிஞானமெனவும், திருவருள்ஞா ன மென வும் படும். இதுவே என்பது பின்னும் வருவிக்கப்பட்டது. இது, என்னுஞ் சுட்டு மேற்கூறிப்போந்த சித்தாந்தசைவத்தின்மே னின்றது. ஏகாரம் பிறிதினியைபு நீக்கிற்று.

மேல் "அல்லாதவெல்லாம்" என்றார். இச்சித்தாந்த சைவ நெறி யொழித் தொழிந்தவெல்லாம் என்றவாறு.

"விதியே மதியாய் விடும்" என்றார். ஈண்டுநின்ற "மதி" யெனச் சமயஞானங்களின்மேற்று. "விதி" யென்னும் சொல் பாசகாரியத்தின்மேற்று. மலநடையென்னும் பொருட்டாம். உலகாயதமுதற் பாஷாணவாத சைவமீறான சமயஞானங்களெல் லாம் பாசஞான பசுஞானங்களாவதன்றிப் பதிஞானமாகாமை யானும், அந்த ஞானங்களாலடையவரும் முத்திகளென்பது அரி வைய ரின்புறுமுத்திமுதற் பாஷாணமுத்தியீறான பழிசேர் முத் தியேயன்றித் திரிமலமுமகல உயிர் அருள்சேர் முத்தியாகாமையா னும், அவ்வச்சமயத்தார் முடிபாகக்கொண்ட அந்நிலைகளெல்லாம் எம்மிறைவனு லதிஷ்டிக்கப்படும் சுத்தமாயா அசுத்தமாயா தத்து வங்களில் ஒவ்வொன்றேயாவதன்றித் தத்துவாதீத நிலையாகாமை

யானும், அவையெல்லாம் மலநடையாய்ப் பிறிதில்லையென்னு முண்மை கூறுவார் விநியேமநியாமெனப் புணர்த்தோதினர். இனி "ஆத" மென்பதேயமைவதாக "ஆய்விடு" மென்றதென்னை யெனின், அவை யங்ஙனம் மலநடையேயாயினும் "புறச்சமயநெறி நின்று மகச்சமயம்புக்குப் புகன்மிருதிவழியுழன்றும்" இங்ஙனம் பல்பிறவியினும் அவ்வச்சமயநெறி நின்று பரிபாக முதிருந்தோறும் விட்டுவிட்டுப்போய் மேலேறிச் "சென்றூற்சைவத் திறத்தடைவ ரிதிற் சரியைகிரியாயோகஞ்செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடி யைச் சேர்வர்" ஆதலின் அவையதற்குச் சோபான முறையாய் இறைவனால் நிறுத்தப்பட்டு நடப்பனவன்றி யாண்டு மொரு பெற்றித்தாய் நிலைபெறுதலின்மையால் ஆருமென்றமையாது ஆய் விடுமெனக் கூறியொழிந்தார். இதனை லேனைச்சமயத்தார்க்கு மோ ருறுதி கூறியவாறு. "சமயகோடிகளெலாந் தந்தெய்வமெந்தெய்வ மென் றெங்குந்தொடர்ந்தெதிர் வழக்கிடவுநின்ற தெது—அந்தப் பெரியபொருளைப் பணிகுவாம்" என்றமையின் எல்லாச்சமயங் கட்கும் எம்மிறைவனே இறைவனென்றுணர்க. "யாதொருதெய் வங்கொண்டீ ரத்தெய்வமாகியெங்கள் மாதொருபாகனார் தாம்வரு வர்" என்பதூஉமது. விரிக்கிற் பெருகும்.

மெய்கண்டதேவன் விரைகழல் வாழ்க.

ஸ்ரீமத் பாஸ்கரசேதுபதிமகாராஜ சமுகம் வாழ்க.

உபந்யாஸத்தின் ஓர் பகுதி

**முற்றிற்று.**

இக்காலத்து எகான்மவாத வேதாந்திகளும் பசுஞானப் பண்டிதருமாகிய சிலர் காமிகாதி திவ்யாகமங்களை அவைதிக மெனவும் அப்பிரமாணமெனவுந் தூஷித்து அல்லல்விளைப்பாரா யினர். அவர் தங்கொள்கையை நிறுத்தற்கு வாயுசங்கிதை முதலிய நூல்களையும் சான்றாகத் தேடினர். இவர் புரியும் சிவாகம நிந்தனைக்குச் சிவாகமசித்தாந்தமணங் கமழும் திவ்யபுராணமாகிய வாயுசங்கிதையைச் சான்றுதேடிய துணிவு அம்மம்ம! சாலவியக் கத்தக்கதே! அற்றேல், வாயுசங்கிதையில் காமிகாதிகளை "அசி ரௌதங்கள்" என்று கூறுவதென்னையெனிற் கூறுதும். உண் ணும் பதார்த்தங்கள் பலவும் உப்பைச் சார்ந்து. சுவைபெறுவன

வாகப் பால்மாத்திரம் அதனுதவிவேண்டாது இயற்கையிற் சுவை மலிந்து விளங்குமதுபோலும், மந்திரங்கள்பலவும் பிரணவத்தின் சம்பந்தத்தால் வலிபெற்று விளங்குவனவாக ஸ்ரீ பஞ்சாக்கா மட்டும் அதனுதவியின்றியும் இயற்கையில் ஆற்றல்பெற்று விளங்குமதுபோலும், நூல்களெல்லாம் வேதத்தைத் தழுவியே ஆதிக்கம்பெறுவதாக, காமிகாதி சிவாகமங்கள்மட்டும் அதன்றுணை வேண்டாது இயற்கையிலே சுதந்திராதிக்கம்பெற்று விளங்கும் சிறப்புடைத்தென்பதே வாயுசங்கிதையி னுட்கருத்தென்றுணர்க. வேதத்தின் உத்தரபாகம் போன்று சிவஞானம் பெருக்கி அவ் விறைவன் றிருவாக்காய் நிலைபெறுவது காமிகாதிகளாகலின், இவ்வுண்மை யுணரப்பெருது அந்தோ! பழிப்புரை பகர்ந்து பாவிக ளாயினர். காமிகாதிகள் அவைதிகமும் அப்பிரமாணமுமாயின் வைதிகமாகிய வேறு ஆகமங்களைத் தேடிக் கொள்ளாது இக் காமிகாதிகளையே அகஸ்தியர், உபமன்னியர் முதலிய உயர்ந்தோர் பலரும், ஸ்ரீ நீலகண்டர், அரதத்தர், அப்பயதீக்கிதர் முதலியனருந் தேடியுய்ந்ததென்னையெனக் கடாவி அவர் வாயையடக்குக. இப் புலவரது முகாலாம்பனமும் இனி நம்மவர் செய்யாதொழிக. விரிக்கிற் பெருகும்.

ஸ்ரீசிவஞானயோகிகள் சேவடிவாழ்க

---

# பண்டைத் தமிழ்ச் சொற்கள்.

(திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை யவர்கள்)

## திரு. (21)

பண்டைத் தமிழ்மக்கள் கடவுளுக்கு வழங்கிவந்த சொற்களில் 'திரு' என்றசொல்லும் ஒன்று. 'திரு' என்ற சொல்லாற் பெறப் படும் கருத்துக்களைப் பற்றி இக்கட்டுரையில் இயன்றவாறு விளக்கு வாம்.

2. திரு என்ற சொல்லானது நான் முன் னெழுதிய இருபது கடவுட் பெயர்ச்சொற்களைப்போலத் தமிழ்ச்சொல் என்று எல்லா ராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட சொல் அன்று. ஆரியர்கள் பலர்

அச்சொல் (ஸ்ரீ) என்ற வடமொழிச்சொல்லின் திரிபு என்று கூறுகின்றனர். பிஷப் கால்டுவெல் (Bishop Caldwell) துரையும் அக்கருத்தைத் தாம் இயற்றிய (Dravidian Comparative Grammar) நூலில் வெளியிட்டிருக்கின்றனர். அக்கருத்து எம்மட்டில் அறிவுக்குப் பொருத்தமாயுள்ளது என்பதுபற்றி முதலாவது ஆராய்வாம்.

3. ஸ்ரீ எழுத்து வடமொழி நெடுங்கணக்கிலுள்ள கூட்டெழுத்துக்களில் ஒன்று. ஶியும் ர வும் சேர்ந்து ஶ்ரீ என்ற கூட்டெழுத்து உண்டாயது. ஆரியர்கள் தென்றமிழ் நாட்டுக்கு வந்து தமிழ் மக்களுடன்கலந்தபொழுது பல வடமொழிச்சொற்கள் தமிழ்மொழியில் வந்து வழங்கப்பட்டன என்றாலும் அச்சொற்கள் வடமொழி உரு மாறித் தமிழ்மொழி உருவைப் பெற்றபின்பே பண்டைக்காலத்தில் தமிழ்மொழியில் வந்து வழங்கப்பட்டுவந்தன. அப்படியில்லாவிடின் வடமொழிச்சொற்களின் கலப்பானது தமிழ்நடைப்போக்குக்கும் மெல்லோசைக்கும் ஒத்துவாராது. ஶ, ஷ, ஸ, ஹ என்ற நான்கு எழுத்துக்களும் பிற்காலத்தில் தமிழ் மொழியில் உருமாறாமல் வழங்கப்பட்டு வந்திருத்தல்போல முற்காலத்தில் வழங்கப்பட்டு வரவில்லை. சங்கநூல்களிலும் பன்னிருதிருமுறை நூல்களிலும் அவ்வெழுத்துக்களை வடமொழி உருவில் நாம் காணமுடியாது. கி.பி. 12-வது நூற்றாண்டில் நன்னூல் இலக்கணம் செய்த சமணத்தமிழ்ப்புலவர் பவணந்தி முனிவர் தமிழ் மொழியில்வந்து வழங்கப்படும் வடமொழிச் சொற்களில் இன்ன வடமொழிஎழுத்து இன்ன தமிழ்மொழி எழுத்தாகமாறும் என்று விதிகள் செய்திருக்கின்றனர். நன்னூல் பதவியல் 'வடமொழி ஆக்கம்' என்ற தலைப்பின்கீழ் அவர் நான்கு சூத்திரங்கள் செய்திருக்கின்றனர். அச்சூத்திரங்களிலொன்றாகிய 147-வது சூத்திரத்தில் "முப்பது சயவும்" என்று கூறினர். அதாவது வடமொழியில் முப்பதாவது மெய்யெழுத்தாகிய ஶ என்ற எழுத்துத் தமிழில் முதலில் ச் ஆகவும் இடையில் ய் ஆகவும் மாறும் என்று கூறி 'வாஶ' என்ற வடமொழிச்சொல் தமிழில் 'பாசம்' என்றும் 'தேஶ" என்ற வடமொழிச்சொல் தமிழில் 'தேயம்' என்றும் வரும் என்று உதாரணங்கள் காட்டினர். இந்த விதிப்படி வடமொழி ஶ என்ற எழுத்து தமிழில் த் ஆக மாறாது. அதே சூத்திரத்தில் அவர் "மேல் இரண்டு 'ச்' 'த்' வும்" என்று கூறியுள்ளார். அதாவது 32-வது மெய்யெழுத்தாகிய ஸ என்ற வடமொழி மெய்யெழுத்து

தமிழ்மொழியில் வரும்பொழுது முதலில் சகரமாகவும் இடையில் சகரமாகவும் தகரமாகவும் மாறும் என்று கூறி, ஸஹா = சபை, வாஸ: = வாசம். மாஸ: = மாதம் என்ற சொற்களை உதாரணங் களாக எடுத்துக்காட்டினர். இதனால் வடமொழி ஸ எழுத்து இடை யில் த் ஆகத் தமிழ்மொழியில் மாறுமேயன்றி ஶ வடமொழி எழுத்து தமிழில் முதலிலாவது இடையிலாவது த் ஆகத் தமிழ் இலக்கணவிதிப்படி மாறாது என்பது நன்கு தெளிவாகும்.

(2) ஶ்ரீ என்ற உயிர் மெய்யெழுத்தில் தொடங்குகிற வடமொ ழிச்சொற்கள் தமிழில் 'சி' ஆகமாறுமேயன்றி 'தி' ஆக மாறவில்லை. ஶீகர: = சீகரம், ஶீக்ர: = சீக்கிரம், ஶீ = சீ தம் = தம், ஶீல: = சீலம் முதலியன. இதனால், ஶ்ரீ என்ற உயிர்மெய் நெட்டெழுத்து 'தி' என்ற உயிர்மெய்க் குற்றெழுத்தாகத் தமிழில் மாற யாதொரு பொருத்தமுமில்லை.

(3) ஆரியர்கள் வடநாட்டிலிருந்து தென்னாட்டுக்கு வந்ததற்கு முன்னமே தென் நாட்டிலுள்ள 274 சிவத்தலங்களுமிருந்தன. அத் தலங்கள் மூவர்களால் பாடப்பெற்று அருட்டன்மையை அடைந்த காரணத்தால் பண்டைத் தமிழர்கள் அவைகளுடைய பெயர்களைத் திரு என்ற அடைமொழியுடன் சேர்த்து வழங்கிவந்தனர். அத்த லங்களில் மூன்று நான்கு தலங்கள் தவிர ஏனைய தலங்களெல்லாம் இப்பொழுதும் 'திரு' என்ற முன் அடைமொழியுடன் வழங்கப் படுகின்றன. இப்பெயர்களெல்லாம் தமிழ்ப்பெயர்களே. பண் டைத் தமிழ்மக்கள் இந்தத் தமிழ்ப்பெயர்களுக்குத் தங்கள் தமிழ் மொழியில் அடைமொழிச்சொல் இல்லாமல் வடமொழியிலுள்ள ஶ்ரீ என்ற சொல்லைத் 'திரு'வாகமாற்றி அடைமொழியாக வழங்கி வந்தனர் என்று கூறுதல் சிறிதும் பொருத்தமில்லை. மேலும் வட மொழி ஶ்ரீ என்ற சொல் செல்வப்பொருளையும் (Material wealth) செல்வப்பொருளின் அதிட்டான சத்தியாகிய இலக்குமியையும் அழகையும் குறிக்குமேயன்றி இறைவனது அருளைக் குறிப்ப தில்லை. எந்தச் சிவத்தலமும் இப்பொழுதும் ஸ்ரீ என்ற அடைமொழி யுடன் வழங்கப்படுவதில்லை. திரு என்ற முன் அடைமொழியுடன் குறிக்கப்படாத காழியும் பருப்பதமும் சீகாழி என்றும் சீபருப்பதம் என்றும் வழங்கப்படுகின்றன. சீபருப்பதம் என்ற சிவத்தலம் திருப் பருப்பதம் என்றும் கூறப்படுகின்றது (திருநாவுக்கரசர் புராணம்

348-ம் பாட்டுப் பார்க்க); ஆரியர்கள் வந்தபின் அவர்கள் வட மொழிப்பெயர்களாக மாற்றின சில சிவத்தலங்களுடைய பெயர் களும் ஸ்ரீ என்ற வடமொழி அடையுடன் இப்பொழுது வழங்கப் படவில்லை. அவ்வாறு அவர்களால் மாற்றப்பட்ட வேதாரணியம் (திருமறைக்காடு), கும்பகோணம் (திருக்குடமூக்கு) முதலிய வட மொழிப்பெயர்கள் ஸ்ரீ என்ற வடமொழி அடைமொழி சேர்த்து வழங்கப்படவில்லை. 108 விட்டுணுதலங்களில் வில்லிபுத்தூர், வைகுந்தம் என்ற இரண்டு தலங்களுள் மாத்திரம் பிற்காலத்து ஸ்ரீ என்றவடமொழி அடைமொழியுடன் வழங்கப்படுகிறது. எந்தத் தலத்துக்காவது ஆழ்வார்கள் தாங்கள் பாடிய திருவாய் மொழிப் பாட்டுக்களில் ஸ்ரீ என்ற அடைமொழி சேர்த்துச் சொல்லவில்லை. அவர்கள் திருவரங்கத்தாய் என்றும், திருவரங்கச்செல்வனார் என் றும், அரங்கமாநகருளானே என்றும் பாடியிருக்கிறார்கள். பிற் காலத்தில் திருவரங்கம் என்பது ஸ்ரீரங்கமாக மாற்றப்பட்டது.

(4) மூவர் தேவாரப் பாக்களில் சிவத்தலங்கள் பெரும்பா லும் யாதொரு முன் அடைமொழியுமில்லாமற் கூறப்பட்டுள் ளன. சிறுபான்மை அடைமொழியுடன் கூறப்பட்ட சிவத்தலங் களில் சீகாழி, சிபருப்பதம் இரண்டு தலங்கள் தவிர ஏனைய சிவத் தலங்களெல்லாம் திரு என்ற அடைமொழியுடன் கூறப்பட்டுள் ளன. பல வடமொழிச்சொற்கள் தேவாரப்பாக்களில் வழங்கப் பட்டிருந்தாலும் ஒரு சிவத்தலமாவது ஸ்ரீ என்ற வடமொழி அடையுடன் கூறப்படவில்லை: திருஞானசம்பந்த சுவாமிகள் பாடிய தேவாரப்பதிகங்களில் 28 தலப்பதிகங்களிலும், திருநாவுக் கரசு சுவாமிகள் பாடிய தேவாரப்பதிகங்களில் 32 தலப்பதிகங் களிலும். சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடிய தேவாரப்பதிகங்களில், 19 தலப்பதிகங்களிலும் ‘திரு’ என்ற அடைமொழி சேர்த்து சிவத்தலப்பெயர்கள் கூறப்பட்டுள்ளன.

(5) பண்டைத் தமிழர்கள் ‘திரு’ என்ற சொல்லை அருள் என்ற பொருளில் இறைவனுடைய அருள்பெற்ற பெரியார்கள் பெயர்களுக்கு முன்னும் அருட்பாடல்பெற்ற தலங்களுக்கு முன்னும் அருளொடு தொடர்புடைய பொருள்களுக்கு முன்னும் அடைமொழியாக வழங்கி வந்திருக்கிறார்கள். திருஞானசம்பந்த சுவாமிகள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் என்ற இந்த இரண்டு பெயர்

களும் வடமொழிப் பெயர்களாயிருந்தாலும் அப்பெயர்களுக்கு முன் ஶ்ரீ என்ற சொல் வழங்கப்படவில்லை. திருஞானசம்பந்த சுவாமிகள் பெயருக்குமுன் திரு என்பது வழங்கப்படுகின்றது. ஸ்ரீ என்ற வடமொழிச் சொல் அருள் என்று பொருள்படாதிருப்பதுவே அதற்குக் காரணம். ஸ்ரீ என்ற சொல் வடமொழியிலும் பெரியார்களுடைய பெயர்கள்முன் வழங்கப்பட்டு வருகின்றதேயன்றித் திருக்கோயில், திருவேடம், திருநந்தனவனம், திருமறை, திருவாய்மொழி, திருத்துளசி, திருநாள், திருவிழா, திருக்குறிப்பு, திருக்கண், திருக்குறள் முதலிய எண்ணில்லாத அருட்பொருள்களுக்குமுன் தமிழ் மொழியில் வழங்கப்படுதல்போல வழங்கப்படுதலில்லை. திருவருள் (இறைவனது அருள்) (திருவடி = அருளாகிய அடி) என்ற சொற்றொடர்கள் தமிழ்மறை நூல்களில் மிக்கு வழங்கப்பட்டு வந்திருக்கின்றன.

(தொடரும்.)

# அருஞ்செய்யுட் பொருட் பகுதி

## திருவெங்கைக் கலம்பகம்

(சு௰-வது செய்யுள்)

[தமிழ்ப்பண்டிதர் கோ. இராமலிங்கத்தம்பிரான் அவர்கள்]

நேரிசை வெண்பா

### நற்றாய் இரங்கல்

விழுமுருளு மேங்குமெழும் வெங்கைக்கோ விந்தா
வெழுமதிய மென்னு மிரங்குந்-தொழுமிதழி
யின்று மரைக்க ணிராமா வருளெனுநீர்
தன்று மரைக்கண் டர.

(இ-ள்) (என்மகள்) தொழும்-தொழத்தக்க, இதழிஇன் - கொன்றைப் பூவாலாகிய, தாமரை - மாலையையுடைய சிவபெருமானே, க(ண்)ணி - நினைத்து, விழும் - (காமமயக்கத்தால்) தரையில் விழுவள்; உருளும் - புரளுவள்; ஏங்கும் - ஏங்குவள்;

எழும் - எழுவள் ; வெங்கை கோவிந்தா-வெங்கையில் எழுந்தரு ளிய கோவிந்தனே ! மதியம் எழும் என்னும் - சந்திரன் தோன் றினன் என்பள் ; இரங்கும் - துன்பப்படுவள் ; தன் தாமரைக் கண் - தனது தாமரை போன்ற கண்களினின்றும், நீர் தா - நீர் ஒழுக, ராமா - இராமனே ! அருள் எனும் - அருள்வாய் என்று கூறுவள் (எ-று).

திருவெங்கையில் எழுந்தருளியவர் சிவபெருமானுகிய பழ மலை நாதரா யிருக்க, அவர் பெயரிட் டழைக்காது காம மயக்கத் தால் திருமாலின் பெயரிட்டழைத்தாள், இஃதென்ன வியப்பு என்பார், 'வெங்கைக் கோவிந்தா' என்றும், 'ராமா அருள்' என் றும் சாதுரியமாகக் கூறினர்.

இதழியின் என்புழி 'இன்' சாரியை ; தாமர் - மாலையை யுடையவர் ; தாமம் - மாலை. கணி-கண்ணி, தொகுத்தல் ; கன் னுதல்-நினைத்தல்.

(என்மகள்) கண்ணி விழும், உருளும், எங்கும், எழும், கோவிந்தா ! எழும் என்னும், இரங்கும், கண் நீர்தா ராமா அருள் (என்பள், என்செய்வேன்) என இயைக்க.

இனி, (என்மகள்) தொழும் இதழி இன் தாமரை கண்ணி விழும், உருளும், எங்கும், எழும், வெங்கைக்கோ - வெங்கையில் எழுந்தருளிய தலைவனே (சிவபெருமானே)! மதியம் எழும், இந்தா- அது சந்திரனு ! (சூரியனைப்போற் காய்கின்றது)! என்னும், இரங் கும், தன் தாமரைக்கண் நீர்தா, ராமா - இன்பத்தைச் செய்ப வனே ! அருள் (எனும்) - என நேரிற் சிவபெருமானைக் குறிப்ப தாகப் பொருள் கொள்க. இஃது உள்ளுறை.

இந்தா-இந்து + ஆ ; இந்து-சந்திரன் ; ஆ-வினைப்பொருட்டு. இனி, வெங்கைக்கோவே ! இந்தா - இங்கு வா, மதியம் எழும், யான் என் செய்வேன் ! என்பதும் ஒன்று. இதில் 'இந்தா' என் பது 'இங்கு வா' என்பதன் மரூஉ.

இனி, கோவிந்தா - நெற்றிக்கண்ணனே ! எனவும் பொருள் கொள்ளலாம். கோ - கண், விந்தம்-நெற்றி.

இனி, இதழி - அதரத்தையுடையவளாகிய என் மகள், வெங் கைக் கோவிந்தா, இனிய தாமரைக்கண் இராமா அருள் எனும் - எனினும் அமையும். இங்கு இதழி, சினையடியாகப் பிறந்த பெண் பாற் படர்க்கைப் பெயர். தொழும் - முற்று. இரங்கும் என் புழி உம்மையை அசையாக்கி, 'இரங்குவாய்' என நற்றுய் வேண்டுகோளாகக் கோடலும் ஒன்று.

---



முதன்முதல் கொலம்பசு அமெரிக்காவைக் கண்டுபிடித்த வரலாற்றை
எசபெல்லா அரசிக்கு விளக்குவது